## பொருளடக்கம்

**நூல் அறிமுக உரை:**

எங்கோ அமைந்துள்ள வனப்பகுதியில் மலர்ந்த காட்டுமலர் போன்றவள் நான். என்னுள் இந்த விதையை விதைத்த எனது தந்தை திரு வி.எஸ். இராமகிருஷ்ணன் அவர்கள் காலடிக்கு இந்த நாவலைச் சமர்ப்பிக்கின்றேன். இரண்டு தலைமுறைகளின் கால மாற்றத்தினால் உண்டான வாழ்க்கைமுறை, என்னை இந்த நாவலை எழுதத் தூண்டியது. இந்த நாவலை படிப்பவர்களால் அதை உணர்ந்து அனுபவிக்க இயலும். எனது இந்த முதல் முயற்சிக்கு தூண்டுகோலாகவும், உறுதுணையாகவும் இருந்த எனது குடும்பத்தினர் அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

விஜயா லட்சுமணன்

lvtr1960@gmail.com

**ஆசிரியர் அறிமுக உரை:**

முப்பது ஆண்டுகள் ஆங்கில ஆசிரியராக பணிபுரிந்து விட்டு ஓய்வு பெற்றவர் விஜயா லட்சுமணன். அவருக்கு ஓவியம், சமையல், நடனம், எழுத்து முதலிய கலைகளில் நாட்டம் மிகுதி. இயற்கையின் அழகை இன்றும் ஒரு குழந்தையின் குதூகலத்துடன் போற்றி பாராட்டுபவர். வாழ்வின் மீது சோர்வோ சலிப்போ இல்லாமல் உற்சாகம் குறையாமல் ஒவ்வொரு நாளையும் புத்துணர்வோடு எதிர்கொள்பவர்.

# 1 *வாழ்வை நோக்கி*

சாணம் தெளித்து சுத்தம் செய்த அழகான முற்றவெளி.நடுவில் வளைவு நெளிவுகளுடன் மிளிரும் கோலம். வாசலின் இருமருங்கிலும் உடலை இதமாக வருடும் காற்றை அள்ளித் தரும் வேப்ப மரங்கள். ஓடு வேய்ந்த அழகான சிறிய வீடு .

வாசலின் முன்னே பாடிக்கொண்டே உரலில் உலக்கை கொண்டு நெல் குத்தும் பெண்மணிகள். ஓடியாடி விளையாடும் குழந்தைகள். தோட்ட வெளியில் மேயும் பசுக்கள். தன் குஞ்சுகளை சிறகில் அணைத்துச் செல்லும் கோழிகள். கயிற்றுக் கட்டிலில் மரத்தடியில் ஓய்வெடுக்கும் தாத்தா. அடுப்பங்கரையில் மதிய உணவு தயார் ஆகிக் கொண்டிருக்கிறது. அரைத்து வைத்த சாம்பாரின் மணம் மூக்கைத் துளைக்கின்றது. திடீரென்று கூடத்திலிருந்து கலகலவென்ற சிரிப்பொலி கேட்கின்றது.

திடுக்கிட்டு கண்விழித்துப் பார்க்கின்றார் சிவராமன். தனியறையில் ஒரு நாற்காலியில் தான் அமர்ந்திருப்பதை உணர்கின்றார். தலைக்கு மேலே சுழலும் மின்விசிறி. நிசப்தமான வீடு. ஆளுக்கொரு தனியறை. அனைத்து வசதிகளும் கொண்ட அடுக்குமாடி குடியிருப்பில் இருக்கும் ஒரு வீடு. மகனும் மருமகளும் அலுவலகம் சென்று விட்டனர். எவ்வளவு நேரந்தான் தனிமையில் உட்கார்ந்திருப்பது. சற்றே சலிப்புடன் எழுந்து பால்கனியில் உலாவத் தொடங்கினார். அவரது மனமும் பின்னோக்கி நகரத் தொடங்கியது. இந்த சென்னைக்கு வந்து ஏறத்தாழ நான்கு வருடங்கள் கடந்து விட்டன. வாழ்க்கையின் வேக ஓட்டந்தான் என்ன? எண்ணி வியந்தார். ம்ம்ம்...பெருமூச்சு விட்டவாறே மனம் அசை போட்டது பழைய நினைவுகளை. அவரது சொந்த கிராமமான பசுவந்தனையை நோக்கி.....பயணப்பட்டது அவரது உள்ளம்.

# 2 உயிர் நாடி

அன்றொரு நாள் அதிகாலை ஐந்து மணி இருக்கும். சிவராமன் தூக்கம் கலைந்து கண் விழித்துப் பார்த்த பொழுது அப்பா ஆறுமுகம் வயலுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தார். "அப்பா, அப்பா நானும் கூட வரேனே. என்னையும் உங்ககூட கூட்டிட்டுப் போங்க" என்று அடம் பிடித்தான் சிவராமன். "சரி, சரி வா போகலாம். நீயும் அதை அவசியம் தெரிந்து கொள்ளனும்" என்றார்.

சிறிய துள்ளலுடன் எழுந்த சிறுவன் சிவராமன் பல்துலக்கி, கைகால் முகம் கழுவி கிளம்பினான். அவனுடைய தாயார் கோமதி அம்மாள் ஒரு குவளை நிறைய நீராகாரம் பருகச் சொல்லி அவனது கையில் கொடுத்தார். குடித்து முடித்ததும் சிவராமன் உடம்பில் ஒரு புதுத்தெம்பு வந்தது. "வாங்கப்பா போகலாம்" என்று முன்னாடி நடையைக் கட்டினான்.

இருவரும் பேசிக்கொண்டே வயல் வரப்புகளின் ஊடே நடந்தனர். பச்சை பசேலென்ற நெற்பயிர்கள் தலையை அசைத்து அவனை வரவேற்பது போல் இருந்தது. நீர் நிரம்பிய வயல் வெளிகளில் உள்ள புழு, பூச்சிகளை உண்பதற்கு வெள்ளைக் கொக்குகள் அங்கு நிறைய வந்திருந்தன. பச்சை நிற வயல்வெளிகளில் வெண்ணிற கொக்குகளின் அணிவகுப்பு மனதைக் கொள்ளை கொண்டது. ஆஹா! என்ன அழகு என நினைத்துக் கொண்டே நடந்த அவனுக்கு தூரத்தில் ஒரு குயிலின் ஓசை கேட்டது. அடடே...கண்ணுக்கும் விருந்து, காதுக்கும் விருந்தா! மனது துள்ளல் நடை போட்டது.

சுமார் அரைமணி நேரம் நடந்திருப்பார்கள். "சிவராமா, அதோ தெரியுதே அதுதான் நம்ம வயல். கண்ணுக்கெட்டிய தூரத்தில் உள்ள வயலைச் சுட்டிக் காட்டினார், அப்பா. "ஐய்யா, அதுக்குள்ள நாம் வந்துட்டோம்" என மகிழ்ச்சியில் கத்தினான். அப்பா வயலில் இறங்கினார். "சேறும், சகதியுமா இருக்கே. இதுக்குள்ள ஏம்ப்பா போனீங்க?" என வினவினான் சிவராமன்." சேற்றில் நாம் கால் வைத்தால்தான் இந்த வையகத்தில் அனைவருக்கும் உணவு கிடைக்கும். பாடுபட்டால் தான் நாம் சாப்பிட முடியும்,"என கூறிக்கொண்டே கால்வாயை வெட்டி வயலுக்கு நீர் பாய்ச்சத் தொடங்கினார்.

சிவராமன் தானும் இறங்கினான். கதிர்கள் வெளிவந்த நிலையில் நெல்மணிகள் இவனைப் பார்த்து சிரித்தன. ஒரு நெற்கதிரைப் பிடித்து அதில் உள்ள நெல்மணிகளை எண்ணத் தொடங்கினான். "அட, இதிலே நூறுக்கு மேலே இருக்குதே அப்பா. எப்படி இந்த நெல்லு முளைச்சு வந்தது?" என தனது சந்தேகத்தை அப்பாவிடம் கேட்டான். அப்பாவும் பொறுமையாக பதில் கூறினார். ஒரு நெல்லை விதைத்தால் ஒரு பயிர் முளைக்கும், ஒரு பயிர் நூற்றுக்கணக்கான நெல்மணிகளை உருவாக்க முடியும். அதனால் நாம் எந்த தானியத்தையும் ,உணவையும் வீணாக்குதல் கூடாது. நாம் கடினமாக உழைத்துதான் அதை உருவாக்குகிறோம். "வா, வா இந்த வயலில் முளைத்துள்ள தேவையில்லாத செடிகளை, களைகளைப் பிடுங்கி வரப்பில் போடு", எனக் கூறினார். அவனும் வேலை செய்து கொண்டே அப்பா எப்படி அந்த வயலை உழுது, நாற்று நடவு பண்ணி நெற்பயிர் விளைவிக்கின்றார் என்பதை அறிந்து கொண்டான். ஒருவருக்கு உணவளிக்கும் உயரிய தொழில் விவசாயம் என்பதை புரிந்து கொண்டான். பின்னாளில் தானும் ஒரு சிறந்த விவசாயியாகத் திகழ்ந்தான். தன்னுடைய உழைப்பின் மூலம் குடும்பத்தையே சிறந்த முறையில் பராமரிக்க முடிந்தது.

உச்சி வேளை வந்தது. இரண்டு பேரும் வேலை செய்து களைப்படைந்து விட்டனர். அதனால் அருகில் உள்ள மரத்தடிக்குச் சென்று அமர்ந்தனர். மரத்தின் குளுமை களைப்பை போக்கி, ஒரு புது உற்சாகத்தைத் தந்தது. கொண்டு வந்த கஞ்சியை எடுத்து, இரண்டு பேரும் சாப்பிடத் தொடங்கினர்.எங்கிருந்தோ காக்கைகள் பறந்து வந்து கா, கா என கரையத் தொடங்கின. சிவராமன் தனது கையை பாத்திரத்தில் விட்டு கொஞ்சம் பழைய சாதத்தை எடுத்து அந்த காக்கைகளுக்குப் போட்டான். அப்போதுதான் அவனுக்கு அந்த சந்தேகம் வந்தது. வேறு எந்த பறவையும் மனிதரோடு மனிதராக அவர்கள் சாப்பிடும் உணவைச் சாப்பிடுவிதில்லையே. இந்த காக்கா மட்டும் எப்படி... என சிந்தித்துக் கொண்டே சாப்பிட்டான். அப்பாவும் சாப்பிட்டுக் கொண்டே சொன்னார். "இந்த காக்கைகள் நமக்கு எவ்வளவு உதவி செய்கின்றன தெரியுமா? இவைகள் இந்த உலகத்தையே சுத்தம் செய்கின்றன. தேவை இல்லாத அழுகிய பொருட்கள், இறந்த உயிரினங்களைத் தின்று நாம் வாழுமிடத்தைச் சுத்தம் பண்ணுகின்றன. அதனால் தான் நாம் இந்த காக்கையை இந்த "உலகின் தோட்டி" என அழைக்கின்றோம். இறைவன் படைப்பில் ஒவ்வொரு உயிரினமும் ஏதோ ஒரு வகையில் இயற்கை பிணைப்பு அறுந்து விடாமல் பாதுகாக்கிறது. அதனால் நாம் எல்லா உயிரினங்களையும் பாதுகாக்க வேண்டியது மிகவும் அவசியம், என தான் அறிந்தவற்றை மகனுக்கு எடுத்துக் கூறினார். உணவுக்குப் பின், தரையிலேயே படுத்துஓய்வெடுக்கத் தொடங்கினர்.

சற்று நேர ஓய்வுக்குப் பின்னர், இருவரும் வயலுக்குத் திரும்பினர். வயலில் நீர் நிரம்பியிருந்தது. எல்லா மடைகளையும் மண்வெட்டியினால் அப்பா அடைக்கத் தொடங்கினார். வேலை முடிந்து, இருவரும் வீட்டுக்குக் கிளம்பினர்.

போகும் வழியில் வேலையாட்கள் சிலர் மண்ணில் இருந்து பனங்கிழங்குகளைத் தோண்டி எடுத்துக் கொண்டிருந்தனர். அவர்கள் இவனைக் கூப்பிட்டு, சில கிழங்குகளை அவன் கையில் கொடுத்தனர். அத்துடன் கிழங்கு வராத கொட்டையினுள் பூத்திருந்த முளைப்பருப்பைச் (தவுண்) சாப்பிடச் சொன்னார்கள். அதைச் சாப்பிட்ட சிவராமனுக்கு அதன் ருசி மிகவும் பிடித்துப் போகவே, இன்னொன்றை கேட்டுப் பெற்றுக் கொண்டான்.போகும் வழியில் அதனை ரசித்துச் சாப்பிட்டுக் கொண்டே சென்றான். அப்போதுதான் தூரத்தில் உள்ள பனை மரங்கள் அவன் கண்ணில் பட்டன. "அப்பா, நாம நெல்லு வளர்க்கிற மாதிரி யார் இந்த பனை மரங்களை வளர்க்கிறார்கள்?" எனக் கேட்டான். "நாம் பனம்பழங்களைச் சாப்பிட்டு அந்த கொட்டைகளை மண்ணில் போட்டாலே போதும் . அவை வளர்ந்து விடும். அதுக்கு நாம தண்ணீர் ஊற்றி வளர்க்க வேண்டாம். அதுவே வளர்ந்து நமக்கு காலமெல்லாம் பலன் கொடுக்கும். அதுபோக, நிலத்தில் தண்ணீரை சேமித்து வைக்கவும் பயன்படும். இயற்கையே இயற்கையை பாதுகாக்கின்றது.உனக்குப் புரியும் என நினைக்கிறேன்", என்றார்.

அந்த ஊரின் நடுவே ஓர் அழகான குளம் அமைந்திருந்தது. இருவரும் அங்கே சென்று சேறு, சகதி, அழுக்கு போக நன்கு குளித்தனர். நீச்சல் அடித்துக் குளிப்பது அவனுக்கு மகிழ்ச்சியாக இருந்தது. வெளியே வர மனமே இல்லை. ஆனால் அப்பா "நேரம் ஆயிருச்சு. அம்மா காத்திருப்பாள். வா, வீட்டுக்கு போகலாம்" என்று கூப்பிட்டதால் அரைகுறை மனதுடன் வெளியே வந்தான்.

அம்மா வாசலிலேயே காத்திருந்தார். "வாங்க, வாங்க என்ன இவ்வளவு நேரமா? எல்லாரும் சாப்பிடலாம்" என்றார். "அம்மா, இன்னைக்கு என்ன குழம்பு வச்சிருக்கீங்க?" என ஆர்வத்துடன் கேட்டான். "நம்ம வீட்டுத் தோட்டத்தில் நீ பூசணி விதை நட்டு வைத்தாயே, அதில் இப்பத்தான் முதல் முதலா ஒரு பூசணிக்காய் காய்த்தது. அதைப் பறித்து வந்து குழம்பு பண்ணியிருக்கிறேன்" என்றார் பூரிப்புடன். "ஆ, அதுக்குள்ள காய்ச்சிருச்சா" என குதூகலித்தான் சிவராமன். "எப்படி நமக்கு தேவையான அனைத்தையும் நாமே உருவாக்க முடிகிறது" என்று எண்ணி தனக்குள்ளே வியந்தான்.

அதன்பின்னர் வாழ்க்கையில் தான் எத்தனை மாற்றங்கள். இந்தக் காலத்திலும் தான் மக்களில் பலர் உழவுத் தொழிலை கையில் எடுத்துள்ளனர். நச்சுத்தன்மை இல்லாத பயிர் உற்பத்தியில் ஆர்வம் காட்டி வருகின்றனர். பல புதிய தொழில்நுட்பங்களைப் பயன்படுத்தி பயிர் செய்கின்றனர்.

அப்படித்தான் அவருடைய மகனின் நண்பன் ஒருவனின் பண்ணை வீட்டிற்கு குடும்பத்துடன் சென்றிருந்தனர்.ஒருங்கிணைந்த பண்ணை விவசாயம் அது. ஒரு பக்கம் கால்நடை வளர்ப்பு, மறுபக்கம் நாட்டுக்கோழிகள், தென்னை மரங்கள், மிளகு, காய்கறிகள், பழ மரங்கள் என அந்த இடமே ஒரு சோலைவனமாக இருந்தது. ஒன்றின் கழிவு, இன்னொன்றுக்கு உரம் என சிந்தித்து செயல்படுத்தி இருந்தனர்.

அந்த தோப்பின் நடுவே அழகான சிறிய வீடு ஒன்று இருந்தது. இயற்கையோடு இணைந்த வாழ்க்கை. பூச்சிக்கொல்லி, இரசாயன உரம் பயன்பாடு இல்லாத இயற்கையான முறையில் உழவுத்தொழில் செய்கின்றனர். காற்று மாசுபாடு இல்லாத இனிமையான சூழலில் வாழ்கின்றனர்.மதியம் ஒரு சுவையான விருந்து அளித்தனர். இளநீர், பழங்கள் என அந்த நாள் மிக இனிமையானதாக அமைந்தது. நாமே வளர்த்து, நாமே அதைப் பறித்துச் சாப்பிடுவதில் ஒரு தனி சுகமே இருக்கிறது.

இதே முறையில் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள இளைஞர்கள் பலர் முன் வந்து உள்ளனர். உழவுத் தொழிலின் முக்கியத்துவத்தை நன்கு உணர்ந்துள்ளனர் .அதிலும், குறிப்பாக இரசாயனம் இல்லாத, இயற்கை முறையை நாடி வருகின்றனர். இதுவே நம் வாழ்க்கையின் நல்ல முன்னேற்றம். சூரிய ஒளி மின்சாரம், பல தொழில் நுட்ப கருவிகள் கொண்டு உழவுத் தொழிலை மேம்படுத்தி வருகின்றனர். இதன் விளைவு, நாட்டில் உணவுப் பஞ்சம் ஒழியும். நாடும் வளம் பெறும். மக்கள் அனைவரும் மகிழ்வுடன் வாழ்வர்.

நேரம் போவதே தெரியாமல் நினைவில் மூழ்கியிருந்த சிவராமனை அழைப்புமணி ஒலிக்கும் ஓசை தட்டி எழுப்பியது. அட, தமிழினியன் பள்ளியிலிருந்து வந்துட்டான் போலிருக்கே என்று நினைத்தபடி வந்து வாசல்கதவைத் திறந்தார். அங்கு பத்துவயது மதிக்கதக்க அவரது பேரன் "என்ன தாத்தா, தூங்கிட்டியா? எவ்வளவு நேரம் நான் காலிங் பெல் அடிப்பது?" என்று சிரித்தவாறு கேட்டான்.இல்லடா, பழைய நினைவுகள் என பதில் கூறியவாறே, வா வந்து முதலில் கை, கால், முகத்தை நன்றாக கழுவிட்டு வா என்றார்.

சிற்றுண்டி அருந்திய பின்பு, "வாங்க தாத்தா, நாம ரெண்டு பேரும் பார்க்குக்கு போகலாம்" என்றான், தமிழினியன். வீட்டைப் பூட்டி விட்டு இருவரும் கிளம்பினர்.

# 3 வாழ்வின் அங்கம்

அந்த நகர்ப்புறத்தின் மத்திய பகுதியில் அமைந்துள்ள ஓர் பூங்கா. அந்தப் பூங்காவின் ஓரத்தில் சிறுவர்கள் விளையாடுவதற்கான விளையாட்டுக் கருவிகள் அமைக்கப்பட்டிருந்தனபூங்காவின் நடுவே ஒரு செயற்கை நீரூற்று உள்ளது. அதைச் சுற்றிலும் வண்ண வண்ண பூச்செடிகள் கண்களுக்கு குளுமையாக வளர்ந்து பூத்துக் குலுங்கின. பூங்காவின் ஓரமாக நடைப்பயணம் செல்வதற்கான பாதை அமைக்கப்பட்டிருந்தது. ஆங்காங்கே அமர்ந்து நண்பர்களுடன் எண்ணங்களைப் பரிமாறிக் கொள்ள வசதியாக உட்காரும் மரப்பலகைகள் பொருத்தப்பட்டிருந்தன. மொத்தத்தில் மக்கள் அனைவரும் களிப்புடன் பொழுதைக் கழிக்கும் இடமாக அந்தப் பூங்கா திகழ்ந்தது.

தாத்தாவும்,பேரனும் கைகளைக் கோர்த்தவாறு நடந்து அந்தப் பூங்காவை அடைந்தனர். உள்ளே சென்றதும் தமிழினியன் "தாத்தா, நான் எனது நண்பர்களுடன் சேர்ந்து விளையாடுறேன். நீங்க ஒரு அரைமணி நேரம் நடந்துட்டு வாங்க," என்றான். "அதுவும் சரிதான். நீ போய் விளையாடு" என்று கூறியவாறே நடக்கத் தொடங்கினார்,தாத்தா.

பூக்களுடன் கூடிய பசுமையான செடி கொடி மரங்கள், அவருக்கு அவரது கிராமத்தை நினைவூட்டின. அதை மனதிற்குள் ரசித்தவாறே நடந்தார். அறிமுகமான மக்களின் புன்சிரிப்பு, விசாரிப்பு அவருக்கு ஒரு புது உற்சாகத்தைத் தந்தது. ஏற்கனவே உழைத்து உரமேறியிருந்த அவரது கால்களுக்கு நடப்பதில் சிரமம் ஏதும் இல்லை. நடந்து கொண்டே இருந்த அவர் சட்டென்று ஒரு மரத்தின் அருகே சென்று அதனை உற்று நோக்கினார். அதன் இலைகளுக்கு நடுவே மொட்டுகள் அரும்ப ஆரம்பித்திருத்தன. அதனைப் பார்த்தும் அவருக்குள் இனம் புரியாத பரவசம். அவர் வளர்த்த மரம் பூத்தது போன்ற ஓர் உணர்வு. சிறிதுநேரம் அங்கேயே நின்று பார்த்து மகிழ்ந்த அவர், பேரனின் நினைவு வரவே அவனைத் தேடிச் சென்றார்.

அவரைப் பார்த்ததும் தமிழினியன் ஓடி வந்து "என்ன தாத்தா, நடந்து களைச்சுப் போயிட்டியா? வாங்க போய் உட்காரலாம்,"என்றான். இருவரும் அருகில் இருந்த ஓர் மரப்பலகையில் அமர்ந்தனர். "இவ்வளவு நேரம் நீ என்ன விளையாடினாய்?" என வினவினார் தாத்தா. நான் இங்கிருந்த சறுக்கு, ஊஞ்சல், எல்லாத்திலேயும் என் நண்பர்களுடன் சேர்ந்து விளையாடினேன் தாத்தா. ரொம்ப நல்லா இருந்தது. நேரம் போனதே தெரியல. ஆமாம் தாத்தா, "நீங்க சின்ன வயசுல விளையாடி இருக்கீங்களா? என்னென்ன விளையாட்டுகள் உங்களுக்குத் தெரியும்?" என ஆர்வத்துடன் கேட்டான்

பதிலுக்குத் தாத்தாவும், அந்தக் காலத்திலேயே நாங்களும் சறுக்கு, ஊஞ்சல் விளையாட்டெல்லாம் விளையாடி இருக்கோம்", என்றார். "ஓ, அப்படியா?" என்று கதைகேட்பது போல் தமிழினியன் கேட்டான். "ஆமாம், ஆலமரத்து விழுதுகளைப் பிடித்தப்படி நண்பர்களுடன் சேர்ந்து ஊஞ்சலாடியது என் நினைவில் இன்றும் பசுமரத்தாணி போல் உள்ளது. அதேபோல் வேப்பமரத்தில் கயிறு, பலகை கொண்டு ஊஞ்சல்கட்டி விளையாடுவோம்" என்றார் சிரித்தபடியே. "சறுக்கு எப்படி விளையாடுவோம் தெரியுமா? கண்மாய் பகுதியிலுள்ள உயர்ந்த கரைமீது அமர்ந்து கொண்டு அதிலிருந்து சறுக்கிக்கொண்டு கீழே வருவோம். அதெல்லாம் ஒரு காலம் "என்றார்.

"ஓ, கேட்கவே ரொம்ப நல்லாயிருக்கு, தாத்தா. உங்களுக்கு பிடித்த விளையாட்டு எது தாத்தா? யாருடன் சேர்ந்து விளையாடுவீங்க?" என்று கேட்டு பதிலை எதிர்பார்த்து காத்திருந்தான். சிறிது நேரம் யோசித்தபின், தாத்தா சொன்னார் "எனக்கு மிகவும் பிடித்த விளையாட்டு கபடி. என் நண்பர்களுடன் வயல்வெளிகளில் சேர்ந்து விளையாடுவேன். அந்த விளையாட்டில் மூச்சுவிடாமல் பாடிக்கொண்டே சென்று எதிரணியினரை தொட்டுவிட்டுத் திரும்பி வர வேண்டும். இந்த மூச்சுப் பயிற்சி நம் உடலுக்கு மிகவும் நல்லது. மேலும் குழு விளையாட்டு மூலம் ஒற்றுமை, விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை போன்ற நல்ல குணங்கள் வளரும். ஆமாம், நீயும் கூட உன் நண்பர்களுடன் விளையாடுவாய், இல்லையா?" எனக் கேட்டார்.

"ஆமாம் தாத்தா, எனக்கு மிகவும் பிடித்த விளையாட்டு கால்பந்து. நானும் என் நண்பர்களுடன் சேர்ந்து விளையாட்டு மைதானத்தில் கால்பந்து விளையாடுவோம். எனக்கு 'கோல் கீப்பராக' இருப்பதுதான் மிகவும் பிடிக்கும். எதிரணியினர் 'கோல் ' போடவிடாமல் தடுப்பதுதான் அவருடைய வேலை. அதனால் மிகவும் கவனத்துடன் விளையாட வேண்டும். அது போக கிரிக்கெட் விளையாடுவதும் எனக்கு மிகவும் பிடிக்கும். அதிலும் 'சிக்ஸர்' அடித்தால் மனம் மகிழ்ச்சியில் மிதக்கும்", என்று தன் உணர்வுகளைத் தாத்தாவுடன் பகிர்ந்து கொண்டான்.

"எங்க காலத்தில் எல்லாம் கிரிக்கெட் கிடையாது. கோலிக்குண்டு, பம்பரம், கிட்டிப்புள் முதலிய விளையாட்டுகள் விளையாடுவோம். "அப்படியா, இதெல்லாம் நான் கேள்விப்பட்டது கூட கிடையாது தாத்தா. எனக்குக் கொஞ்சம் சொல்லுங்களேன் "எனத் தெரிந்து கொள்ளும் ஆர்வத்துடன் கேட்டான்.

கோலிக்குண்டு என்பது சிறிய குண்டுகளை வைத்து விளையாடுவது. ஒருவர் மற்றொருவரின் குண்டை குறி வைத்து அடித்துக்கொண்டே, தனது குண்டை மூன்றாவது குழியில் சேர்க்க வேண்டும். முதலில் சேர்ப்பவர் வெற்றி பெற்றவராவர்.

பம்பரம் சுற்றி விளையாடுவது, அதற்குத் தனித்திறன் வேண்டும். பம்பரத்தைக் கயிறு கொண்டு சுற்றி சுண்டி இழுத்துவிட்டு, பம்பரத்தைச் சுழல விடவேண்டும். யாருடைய பம்பரம் அதிகநேரம் சுழல்கின்றதோ, அவரே வெற்றி பெற்றவர்.

கிட்டிப்புள் விளையாட்டு இரண்டு குச்சிகள் கொண்டு விளையாடப்படும் ஓர் விளையாட்டு. சிறிய குச்சியின் இரு முனைகளும் கூர்மையாக சீவப்பட்டிருக்கும். பெரிய குச்சியின் ஓர் முனை மட்டும் கூர்மையாக இருக்கும். ஒரு சிறிய பள்ளத்தைக் கிள்ளி அதன்மேல் சிறிய குச்சியை வைக்க வேண்டும். பெரிய குச்சியைக் கொண்டு சிறிய குச்சியின் ஓர் முனைப்பகுதியை ஓங்கி அடித்து, அந்தக் குச்சி எம்பும் பொழுது, அந்தக் குச்சியைத் திரும்பவும் அடித்து வெகு தூரத்திற்குத் தள்ள வேண்டும். யார் அதிக தூரம் அடிக்கிறாரோ, அவரே வெற்றி பெற்றவர். இப்படி எல்லா விளையாட்டுக்களுமே ஒருவரின் திறமையை வளர்க்கவே பயன்படுகிறது. அதே நேரம் மகிழ்ச்சியும் கொடுக்கும். இப்போது இந்த விளையாட்டுகள் எல்லாம் மறைந்து விட்டன என்றார் பெரு மூச்சுடன்.

எல்லா நேரங்களிலும் விளையாட்டு நமக்கு சந்தோசம் மட்டும் தருவதில்லை. சில சமயங்களில் நண்பர்களுக்கிடையே சண்டைகளும் வருவது உண்டு. வேறு சில பிரச்சனைகளும் வருவது உண்டு. அப்படித்தான் ஒரு தடவை கிட்டிப்புள் விளையாடும் போது வேகமாக அந்தக் குச்சியை அடித்தேன். அப்போது குறுக்கே வந்த என் நண்பன் கண்ணின் அருகே அது பட்டு, அவனுக்கு மிகப் பெரிய காயம் ஏற்பட்டது. இரத்தம் வழிந்ததால் சிறிது நேரம், அனைவரும் பதட்டமடைந்து விட்டோம். பிறகு இரத்தம் வருவதை நிறுத்தி, மருந்து போட்டு விட்டோம். அந்தக் காயம், ஆறுவதற்கு பத்து நாட்கள் ஆயின. அதனால் விளையாட்டில் கவனம் முக்கியம்.

"நீங்க சொல்றது சரிதான் தாத்தா". "இப்படித்தான் என்னுடைய நண்பன் நாகராஜனுக்கு கிரிக்கெட் விளையாடும் போது பந்து காலில் பட்டு பெரிய காயம் ஏற்பட்டு, அது ஆறுவதற்கு பத்து நாட்கள் ஆயின. பாவம், பத்து நாட்கள் அவனுக்கு வேதனைதான்."ஆமாம், அந்தக் காலத்துல பெண்களும் விளையாடுவாங்களா தாத்தா?" என சந்தேகத்துடன் கேட்டான்.

ஒரு பெண் பெரிய பெண்ணாகும்வரை தான் தெருவில் வந்து விளையாடுவாள். அதற்கப்புறம் வீட்டுக்குள்தான் விளையாட்டு. பெண்கள் பெரும்பாலும் நொண்டியடித்து விளையாடுவார்கள். ஒருகாலால் தாவி, தாவி மற்றவர்களைப் பிடிப்பது மிகவும் வேடிக்கையாக இருக்கும். அதுபோக அவர்கள் ஆடும் பாண்டி விளையாட்டு, கிளித்தட்டு முதலியவை மிகவும் பிரபலமானவை. பாண்டி விளையாட்டில் கட்டம் போட்டு கட்டத்திற்குள் நொண்டியடித்து விளையாடுவது, கண்களை மூடிக்கொண்டு ரைட்டா, தப்பா எனக் கேட்டு செல்வது, தலையில் அல்லது கையில் ஒரு சில்லை வைத்துக் கொண்டு கீழே விழாமல் செல்வது, இதெல்லாம் பெண்கள் திறமைக்கு ஒரு சவால். அதே போல் 'கிளித்தட்டு' ஆட்டத்தில் ஒரு சதுரக்கட்டம் அமைத்து நான்கு மூலைகளிலும் கால் பாதத்தால் ஒரு வட்டம் அமைத்து நான்கு பெண்கள் நின்று கொள்வார்கள். நடுவில் உள்ள பெண் அவர்கள் கட்டம் மாறும்பொழுது எதாவது ஒரு கட்டத்தில்போய் நின்றுவிட வேண்டும். அந்தக் கட்டத்தில் உள்ள பெண் திரும்பி பட்டுவரவேண்டும். இந்த மாதிரி திறமைகளை வளர்க்கும், பல ஆர்வமான விளையாட்டுகள் அந்தக் காலத்திலும் இருந்தன.

தாத்தா சொல்வதை வைத்த கண் மாறாமல் பார்த்துக் கொண்டே, ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருந்தான் தமிழினியன். ஏன் இப்ப கூட அந்த மாதிரி விளையாட்டுகளை விளையாடலாமோ என அவன் மனதில் ஓர் எண்ணம் தோன்றியது.தாத்தா மேலும் தொடர்ந்தார்.

பெரிய பெண்ணானபின், அவர்கள் வீட்டிற்குள்ளேயே விளையாடுவர். அதில் முக்கியமானது, பல்லாங்குழி. ஒரு பலகையில் இந்தப் பக்கமும், அந்தப் பக்கமும் குழிகள் அமைக்கப் பட்டிருக்கும். இருவர் விளையாடுவர். குழிகளில் ஐந்து, ஐந்து முத்துக்கள் நிரப்பப்பட்டிருக்கும். விளையாட்டின் முடிவில் யார் அதிக முத்துக்கள் எடுக்கிறாரோ, அவரே வெற்றி பெற்றவர். இது மூளைத்திறனை வளர்க்கும் ஒரு விளையாட்டு ஆகும்.

இதுபோக தட்டாங்கல், தாயம் முதலியவை பெண்கள் விளையாடும் முக்கிய விளையாட்டுகள். ஐந்து சிறிய கற்களை வைத்து, தரையில் தட்டித் தட்டி கற்களை வாரி எடுத்து விளையாடும் விளையாட்டு தட்டாங்கல். சோழி அல்லது முத்துகொண்டு தரையில் கட்டமிட்டு விளையாடுவது தாயம். இன்றளவும் பெரும்பாலும் தாயம் விளையாடப்படுகின்றது. மற்ற விளையாட்டுகள் மெல்ல, மெல்ல மக்கள் மனதில் இருந்து மறைந்து விட்டன, என்றார் தாத்தா ஒரு பெருமூச்சுடன்.

விளையாட்டு ஆர்வத்தில் இருவரும் நேரம் போவது தெரியாமல் பேசிக் கொண்டிருந்தனர். சூரியன் மறைந்து, மெல்ல இருள் கவ்வத் தொடங்கியதைக் கவனித்த தாத்தா, "நேரம் ஆறு மணிக்கு மேல் இருக்கும் போலிருக்கிறதே, வா வீட்டுக்கு போகலாம்" என்றவாறே எழுந்தார்.

இருவரும் வீட்டிற்குத் திரும்பினர். அம்மாவும், அப்பாவும் அலுவலகத்திலிருந்து வீட்டிற்குத் திரும்பியிருந்தனர். தமிழினியனின் அக்காவான மகிழினியும், சிறப்பு வகுப்பு முடிந்து பள்ளியிலிருந்து திரும்பிருந்தாள். தமிழினியன் தனது வீட்டுப்பாடங்களை முடிக்கச் சென்றான். மகிழினி தாத்தாவிடம் உட்கார்ந்து சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தாள். இரவு உணவிற்குப்பின் அனைவரும் உறங்கச் சென்றனர்.

# 4 உடல் வளர்த்தேன்

அடுத்த நாள் காலை மணி சுமார் ஆறரை இருக்கும். கதிரவன் தன் செந்நிற கதிர்களை வானில் பரப்பிக் கொண்டிருந்தான். தமிழினியன் எழுந்து வந்தபொழுது, தாத்தா பால்கனியில் சூரிய நமஸ்காரம் செய்து கொண்டிருந்தார் அந்த அதிகாலை நேரத்திலேயே குளித்து முடித்து நெற்றியில்திருநீறு இட்டிருந்தார்.வெள்ளை வெளேரென்ற சுத்தமான வேட்டி, இடுப்பில் கட்டிய துண்டுடன் காட்சியளித்தார்.

"என்ன தாத்தா, தினமும் குளித்து முடித்தவுடன், ஏன் இந்த சூரியனை கும்பிடுகிறாய்?" என குழப்பத்துடன் கேட்டான், தமிழினியன். "இந்தச் சூரியன் இல்லையென்றால் இந்த உலகமே இருண்டு விடும். இந்த உலக இயக்கத்திற்குச் சூரியன் மிக அவசியம். அதனால்தான் அதை தினமும் வணங்கும் பழக்கத்தை நம்முன்னோர்கள் ஏற்படுத்தி உள்ளனர்" என்றார் தாத்தா பதிலுக்கு. மேலும், "இந்த உலகம் பஞ்ச பூதங்களால் ஆனது. நீர், நிலம், காற்று, நெருப்பு, ஆகாயம் என்னும் ஐந்து பெரிய சக்திகள் நம் வாழ்க்கைக்கு ஆதாரங்களாக விளங்குகின்றன. இவைகளால் ஆக்கவும் முடியும், அழிக்கவும் முடியும். இதை அறிந்த காரணத்தினால்தான், ஆதிமனிதன் இயற்கையை வணங்கினான். மழை வெள்ளம், நில அதிர்வு, புயல்காற்று, பெரும் நெருப்பு முதலியவை மனித இனத்தையே அழிக்கும் பெரும் சக்திகளாகும். அந்தக் காலத்திலே மாதம் மும்மாரி பெய்யும். மக்கள் பயிர்செய்து நிம்மதியாக வாழ்ந்தனர். இப்போதெல்லாம் செய்திகள் மூலம் அமேசான் காடுகள் தீப்பிடித்து எரிந்து கொண்டிருக்கிறது, இந்தியப் பெருங்கடலில் சுனாமி என்றெல்லாம் கேள்விப் படுகிறோம் இல்லையா? அதனால் நாம் இயற்கை சக்திகளை வழிபட வேண்டும். அவற்றை பாதுகாக்க வேண்டும்.' என்ன தமிழினியா, புரிந்ததா?", என தாத்தா கேட்ட கேள்வி, தமிழினியனை சிந்திக்க வைத்தது.

நேரம் போவதை உணர்ந்த தமிழினியன் பள்ளிக்கு கிளம்ப ஆரம்பித்தான். காலை நேர பரபரப்பு. அம்மா பானுமதி பரபரவென்று அடுப்பங்கரையில் வேலை செய்து கொண்டிருந்தார். மகிழினி குளித்துமுடித்து, தன் புத்தகங்களை பையில் அடுக்கிக் கொண்டிருந்தாள். அப்பா தான் படித்து முடித்த செய்தித்தாளை மடித்து வைத்துவிட்டுக் குளிக்கத் தயாரானார். காலை எட்டு மணி. அனைவரும் வீட்டின் சாப்பாட்டு மேசையின் முன் அமர்ந்தனர். அம்மா தயார் பண்ணியிருந்த உணவு வகைகளை அனைவருக்கும் பரிமாறினார். தாத்தாவுக்கு வழக்கம் போல கேப்பைக்கூழ். அப்பாவும், மகிழினியும் இட்லி சாப்பிட, தமிழினியன் மட்டும் பிடிவாதம் பிடித்தான். "அம்மா, எனக்கு பிரட் டோஸ்ட் தான் வேணும்" என்றான்.

வேறு வழியில்லாமல், அலுவலகம் கிளம்பும் அவசரத்திலும் அம்மா அவன் கேட்டதை செய்து கொடுத்தார். "தாத்தா, நீங்க மட்டும் எப்படி தினமும் இந்த கேப்பைக் கூழையே குடிக்கிறீங்க?" எனக் கேட்டான். அதற்குத் தாத்தா புன்முறுவலுடன் "வெங்காயம், பச்சை மிளகாய் போட்ட இந்த கேப்பைக்கூழ் தேவாமிர்தம். உடலுக்கு உறுதியைத் தரும் சத்தான உணவு. இங்கே பார், இந்த வயதிலும் நான் எப்படி வலிமையாக இருக்கிறேன்", என்றார். "ஓ, அப்படியா. உண்மை தான்", என்றவன் சாப்பிட்டு முடித்து பள்ளிக்கு வேகமாகக் கிளம்பினான் .

அனைவரும் அவரவர் வேலைக்குச் சென்று விட்டனர். வீடே அமைதியாகி விட்டது. ஈசிசேரில் சாய்வாக அமர்ந்து கொண்டு, சிவராமன் கண்களை மெதுவாக மூடினார். அவர் கண்முன்னே பார்வதியின் தோற்றம் நிழலாடியது. பார்வதி அவரை விட்டு பிரிந்து நான்கு வருடங்கள் ஆகிவிட்டன. வாழ்க்கையில் தான் எத்தனை எத்தனை மாற்றங்கள்!

பார்வதி சமைத்தால் பத்து தெருவுக்கும் மணக்கும். பக்கத்து வீட்டு இருளாயி வந்து, "என்ன குழம்பு ஆத்தா வைச்சிருக்க? மணம் ஆளையே தூக்குது. . எனக்கு கொஞ்சம் குழம்பு குடு", எனக் கேட்டு வாங்கிச் செல்வாள். அப்படி ஒரு கைப்பக்குவம். சாப்பிடுபவர்கள் யாரும் பாராட்டாமல் செல்ல மாட்டார்கள்.

அப்படித்தான் ஒரு நாள் சிவராமனின் நண்பர்கள் இருவர் வந்திருந்தனர். மூவரும் வெளியே சென்று விட்டு மதியம் சாப்பிட வீட்டுக்கு வந்தனர். பார்வதி சாதம் வடிச்சு , வீட்டில் வளர்த்த கோழியை கறி சமைத்திருந்தாள். வறுத்து அம்மியில் அரைத்த மசாலா வைத்து செய்த கோழிக்குழம்பு நண்பர்களை மெய்மறக்கச் செய்தது. திருப்தியாகச் சாப்பிட்டு விட்டு, பாராட்டிச் சென்றனர். அசைவம் மட்டுமில்லாமல், எது சமைத்தாலும், அவள் கைப்பட்டாலே மணக்கும். எத்தனை வருடங்கள் ஆனாலும் அவள் நினைவு மட்டும் மனதை விட்டு நீங்கவே இல்லை. சற்றே கனத்த இதயத்துடன் மருமகள் பானுமதி மதிய உணவுக்கு சமைத்து வைத்திருந்த வெஜிடபிள் பிரியாணியை எடுத்து சாப்பிடத் தொடங்கினார். மருமகள் வேலைக்குச் சென்றாலும், அவர் மீது அக்கறை கொண்டவள். அதனால் அவருக்கு பிடித்த உணவு வகைகளை தயார் செய்து தருவாள். மதிய உணவுக்குப்பின், ஓய்வெடுக்கத் தொடங்கினார்.

மாலையில் பள்ளியில் இருந்து திரும்பி வந்த தமிழினியன், "தாத்தா, இன்னைக்கு எனக்குச் சாப்பிட பிஸ்கட் வேண்டும்" எனக் கேட்டான். "சரி, சரி தருகிறேன் வா" என இரண்டு பிஸ்கட்டுகளை எடுத்துக் கொடுத்தார். "நாங்கல்லாம் மாலையில் சுண்டல், கொழுக்கட்டை இந்த மாதிரிதான் சாப்பிடுவோம். காலையில் பணியாரம் , வடை முதலிய பலகாரங்கள் என்றைக்காவது ஒரு நாள் பண்ணுவார்கள். அவ்வளவுதான்" என்றார். "ஆனால் நீங்கள் பப்ஸ், பீட்சா, பர்கர் என்று என்னென்னவோ சாப்பிடுகிறீர்கள். அதெல்லாம் உடம்புக்கு அவ்வளவு நல்லது இல்லைப்பா" என்றார் அன்புடன்.

"ஆமாம் தாத்தா. நீங்க சொல்வது சரிதான்". இன்றைக்கு எங்க சயின்ஸ் டீச்சர் ஊட்டச்சத்து பற்றிய பாடம் நடத்தினார்கள். அப்பொழுது சத்துள்ள உணவு பற்றி எடுத்துக் கூறினார்கள். இனிமேல் நான் பயறுவகைகள், கீரைகள், பழங்கள், காய்கறிகள் எல்லாம் சாப்பிடுவேன்" என்று கூறிக் கொண்டிருக்கும் போதே மகிழினி பள்ளியிலிருந்து வந்து விட்டாள். எட்டாம் வகுப்பு படிக்கும் மாணவி அவள். "என்னது தமிழினியா, சாப்பாடு பற்றி தாத்தாவிடம் பேசிக் கொண்டிருக்கிறாய்?" என ஆர்வத்துடன் கேட்டாள். எங்க டீச்சர் ஊட்டச்சத்து பற்றி பாடம் நடத்தினாங்க. அதைப் பத்திதான் பேசிட்டு இருக்கிறேன்", என்றான்.

தாத்தாவும் மகிழினியைக் கூப்பிட்டு பக்கத்தில் அமரச் சொன்னார். "வளரும் வயசுல, பிள்ளைங்க சாப்பாட்டுல கவனமாக இருக்கனும். அந்த காலத்துல உளுந்தங்களி, உளுந்தஞ்சோறு எல்லாம் பொண்ணுங்களுக்கு செய்து கொடுப்பார்கள். அதில் நல்லெண்ணெய் ஊற்றிச் சாப்பிட்டால் எலும்பு பலம் பெருகும். வயதான காலத்தில் கூட கைகால் மூட்டு வலி அவர்களுக்கு வராது. அதனால் நாம சாப்பிடும் சாப்பாட்டில மிகவும் கவனமாக இருக்கனும்" என்றார்."சரிங்க தாத்தா" என்றாள் மகிழினி மிகவும் மரியாதையுடன். இரவு உணவின் போது பரிமாறப்பட்ட தோசை, கொத்தமல்லி சட்னியை இருவரும் ஒழுங்காக சாப்பிட்டனர்.

சாப்பிட்டு முடித்த பின்பு அனைவரும் ஹாலில் சோபாவில் அமர்ந்தனர். பானுமதி கிச்சன் வேலைகளை முடித்த பின்பு தானும் அவர்களுடன் கலந்து கொண்டாள். "மாமா, இன்றைக்கு காலையிலே நீங்கள் சத்தான உணவு பற்றிச் சொன்னவுடன்தான் எனக்கும் ஞாபகம் வந்தது. எங்க பாட்டி கூட என்னை உளுந்தங்களி, சுண்டல் போன்றவற்றை சாப்பிடச் சொல்லி வற்புறுத்துவார்கள். மகன் குணசீலன், " ஆம் அப்பா, நம்ம அம்மா கூட அக்கா வேதவல்லிக்கு உளுந்தினால் செய்யப்பட்ட உணவு வகைகள், நாட்டுக்கோழி முட்டை போன்றவற்றை அடிக்கடி செய்து கொடுப்பது எனக்கு நன்றாக நினைவில் இருக்கிறது. இந்தக் காலத்திலேயும் மூன்று பிள்ளைகளைப் பெற்று அவள் நலமுடன் இருக்கிறாள். சிசேரியன் என்பது சர்வ சாதாரணமான இந்தக் காலத்தில் கூட அவளுக்கு சுகப்பிரசவம் ஆனது மிகவும் ஆச்சரியம் தரக்கூடிய ஒரு விசயம்", என பெருமையுடன் கூறினார். "நீ சொல்வது முற்றிலும் சரிதான்.

வளர்கின்ற இளம் பருவத்தில் நாம் உணவில் அக்கறை காட்ட வேண்டியது மிகவும் அவசியம். எல்லா உறுப்புகளும் வளர்ச்சி அடையும் இந்த நேரத்தில் மனதளவிலும் சில மாற்றங்கள் ஏற்படும். இக்காலகட்டத்தில் நாம் சாப்பிடும் உணவு தான் நம்முடைய ஆரோக்கியமான வாழ்க்கைக்கு வழி வகுக்கும். ஆனால் நாம் இன்று பாக்கெட்டுகளில் அடைக்கப்பட்டுள்ள உணவு வகைகளை பயன்படுத்துகின்றோம் ". பானுமதி வேகமாக "வேறு வழியில்லையே, மாமா. இருவரும் வேலைக்குச் செல்ல வேண்டியிருப்பதால் நாமே தயார் பண்ண நேரம் இருப்பதில்லையே" என்றாள் சோர்வாக. "நீ சொல்வதிலும் உண்மை இருக்கிறது பானுமதி. அவசர கதியில் இயங்கும் இந்த வாழ்க்கைக்கேற்ப நீங்களும் ஓட வேண்டியிருக்கிறது. என்ன செய்வது!" என்றார்.

அந்தக் காலத்து பெண்கள் அம்மி, திருகை, உரல் போன்றவற்றைப் பயன்படுத்தினர். இப்பொழுதெல்லாம் அவற்றை நாம் கண்காட்சியில் தான் பார்க்க முடியும். ஒரே திருகையைப் பயன்படுத்தி பருப்பு உடைத்தனர். அரிசி மாவு தயார் பண்ணினர். வேகமாகச் சுற்றினால் உளுந்து இரண்டுரண்டாக உடையும். அதிலேயே வறுத்த உளுத்தம்பருப்பைக் கொஞ்சம் கொஞ்சமாகப் போட்டுச் சுற்றினால், அதுவே மாவாகி விடும். அதேமாதிரிதான் ஒரே உரல் ஒரே உலக்கை கொண்டு நெல்லைகுத்தி அரிசியாக்கினர்.அரிசியை மாவாக்கினர். அம்மியில் அரைத்த துவையல் மணக்கும் என்றார்", பழைய நினைவுகளை கண்முன்னே நிறுத்தி. மகிழினி, "நான் அம்மி, ஆட்டாங்கல், திருகை, உரல் இதெல்லாம் பார்த்தது கூட கிடையாது. அடுத்த தடவை நம்ம கிராமத்துக்கு செல்லும் போது எனக்கு நீங்கள் அதை கண்டிப்பாக காண்பிக்க வேண்டும் தாத்தா", என்றாள் ஆர்வமாக.

இப்பொழுது அந்த இடத்தை நீங்கள் பயன்படுத்தும் ஜிம் கருவிகள் நிரப்பிவிட்டன. அம்மி உரல் மூலம் கிடைக்கும் உடற்பயிற்சிக்கு பதில், நீங்கள் தனியாக நேரம் ஒதுக்கி ஜிம் பயிற்சிகள் செய்கின்றீர்கள். அந்தக் காலத்தில் உடல் பருமன் உள்ள பெண்களை அதிகமாக பார்க்க முடியாது. ஆனால், இந்தக் காலத்தில் சிறுவயதிலேயே பலர் உடல் பருமனால் அவதிப்படுகின்றனர்.

சிறிது யோசனையுடன் “அப்பா, ஆனால் இப்போது உள்ள மக்களுக்குக் கொஞ்சம் விழிப்புணர்வு வந்துள்ளது. இயற்கை உணவு வகைகளையே சாப்பிடுகின்றனர். பதப்படுத்த பட்ட உணவு வகைகளை பெரும்பாலும் பயன்படுத்துவதில்லை. பழங்கள், காய்கறிகள், கீரை வகைகளை அதிகம் விரும்பி உண்ணுகின்றனர். உடல்நலத்தில் அக்கறை காட்டுகின்றனர். சரி வாங்க, அனைவரும் தூங்கலாம்", என்று கூறி கலந்துரையாடலை முடித்து வைத்தார். "நீங்கள் சொல்வது முற்றிலும்

உண்மை, மாமா. என்னுடைய தோழி நீலா, உடல் பருமனை குறைப்பதற்காக சில உணவு முறைகளை பின்பற்றி வருகின்றாள். மாவுச்சத்து, இனிப்பு சார்ந்த உணவு வகைகளை முற்றிலும உண்பதை தவிர்த்து விட்டாள். அதற்குப் பதில் கொழுப்பு, புரத சத்து மிகுந்த உணவு வகைகளை உட்கொள்கிறாள். இதனால் அவள் உடல் எடை மிகவும் குறைந்துள்ளது".

இதைக் கேட்ட சிவரமன், "என்னவோமா, எனக்கு இதில் அவ்வளவாக உடன்பாடு இல்லை. நமது முன்னோர்கள் பின்பற்றி வந்த உணவுமுறையைக் கடைப்பிடித்தாலே போதும். எளிய உடற்பயிற்சி மறறும் நடைபயிற்சி எடைகுறைப்பதற்கு உதவி செய்யும். அதை விட்டுவிட்டு வெறும் கொழுப்பு மற்றும் புரத உணவு வகைகளை மட்டும் எவ்வளவு நாட்கள் எடுத்துக் கொள்வது? நமது உடம்பிற்கு எல்லா வகையான சத்துகளும் தேவை தானே?" தமிழினியன் உடனே, " ஆமாம் தாத்தா, எங்க டீச்சர் கூட ஊட்டச்சத்து பாடம் நடத்தும் போது சொன்னாங்க. மாவுச்சத்து, புரதச்சத்து, கொழுப்பு, வைட்டமின்கள் மற்றும் தாது உப்புகள் தேவையான அளவு கலந்துள்ள உணவே சரிவிகித உணவு. அந்த மாதிரி தான் சாப்பிட வேண்டும் என்றார்கள். சரிதானே தாத்தா?" என்றான் மகிழ்ச்சி கலந்த புன்சிரிப்புடன். தாத்தாவும் தலையாட்டினார்.

# 5 *நிலாச்சோறு*

மறுநாள் சனிக்கிழமை. அன்று விடுமுறை நாள் என்பதால்,வீட்டில் உள்ள அனைவரும் பரபரப்பு ஏதும் இல்லாமல் மெதுவாக இயங்கினர். அம்மா காலை உணவு முடிந்தவுடன் வீட்டை ஒழுங்குபடுத்தும் வேலையைச் செய்ய ஆரம்பித்தார். அப்பா விடுபட்டுப் போன அலுவலக வேலையில் மும்முரமாக மூழ்கிப் போனார். மகிழினி தனது புத்தக அலமாரியை அடுக்கிக் கொண்டிருந்தாள். தமிழினியனும், தாத்தாவும் பால்கனியில் உள்ள செடிகளுக்கு தண்ணீர் ஊற்றிக் கொண்டே பேசினர்.

"தாத்தா"என கூப்பிட்டவன், "இன்னைக்கு ஒரே ஜாலிதான் ஏன்னு சொல்லுங்க பார்ப்போம்," என்றான். சிறிது நேரம் யோசித்த பின் தாத்தா கேட்டார், "இன்னைக்கு உன்னுடைய நண்பர்களோட கால்பந்து விளையாட போறயா என்ன? அதற்கு அவன், "இல்லை தாத்தா, நாம எல்லாரும் இன்னைக்கு பாட்லக் போறோமே," என்றான் முகமலர்ச்சியுடன். "அப்படின்னா என்னது கண்ணா? என்றார் தாத்தா ஒன்றும் புரியாதவராக. " நாம் எல்லோரும் இன்று இரவு பக்கத்தில் இருக்கும் ஒரு பார்ட்டி ஹாலுக்கு போகிறோம் .அதே மாதிரி அப்பாவுடைய நண்பர்களும் குடும்பத்துடன் அங்கு வருவார்கள் ஒவ்வொருவரும் அவர்களுக்குத் தெரிந்த உணவு வகைகளை செய்து கொண்டு வருவார்கள். நாம எல்லோரும் சேர்ந்து விளையாடலாம் ஒன்றாக சேர்ந்து சாப்பிடலாம். நாள் முழுவதும் என்ஜாய் பண்ணலாம், தாத்தா", என்றவன் சந்தேகத்துடன் "ஆமாம் தாத்தா உங்க காலத்துல இப்படி எல்லாம் பார்ட்டி எல்லாம் உண்டா?' என்று வினவினான்.

"ஏன் இல்லாமல் அந்த காலத்தில் நாங்கள் செய்ததை எல்லாம், நீங்கள் கொஞ்சம் வித்தியாசமாக செய்கிறீர்கள், அவ்வளவுதான்" என்றார் தாத்தா.சற்றே வியப்படைந்த தமிழினியன், "ஓ அப்படியா, என்ன செய்வீங்க?'என்று ஆர்வத்துடன் கேட்டான். தாத்தா அந்த காலத்திற்கே சென்று விட்டார்.அன்றொருநாள் பௌர்ணமி இரவு. முழு நிலா தங்கத்தட்டு போல் வானில் உலா வந்தது. நிலா தனது ஒளி வெள்ளத்தால் முற்ற வெளியை நிறைத்தது. வீடு, உறவினர்கள், குழந்தைகளுடன் கலகலப்பாக இருந்தது. முற்றத்தில் பெரியவர்கள் அனைவரும் வட்டமாக அமர்ந்து அரட்டை அடித்துக் கொண்டிருந்தனர். சிவராமனும் அப்போது சிறுவனாக இருந்ததினால் அவர்களுடன் சேர்ந்து விளையாடிக்கொண்டிருந்தான் . வீட்டுப் பெண்கள் அனைவரும் சேர்ந்து அடுப்பங்கரையில் சமைத்துக் கொண்டிருந்தனர். சமைக்கும் போதே அவர்கள் கதையளக்கும் சத்தம் சிவராமன் காதுகளில் விழுந்தது.

சிவராமனின் அம்மா அடுப்பில் கொதித்துக் கொண்டிருந்த குழம்பை கரண்டியால் கிண்டி விட்டுக் கொண்டிருந்தார். இன்னொரு பக்கம் அவனது சித்தி அம்மியில் மசாலா அரைத்துக் கொண்டிருந்தாள். அவனின் அத்தை காய்கறிகள் நறுக்கிக் கொண்டு இருந்தார் வீடு நிரம்பி சந்தோஷம் வழிந்தோடியது.

விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்கள் இடையே திடீரென ஒரு சின்னத் தகராறு ஏற்பட்டது அதில் ஒருவன் மற்றொருவனை அடித்து விட்டான் அடி வாங்கியவன் சும்மா விடுவானா? ஓவென்று கதறி அழுதவாறே அம்மாவிடம் போன அவன், "இவன் என்னை அடித்து விட்டான்", என புகார் ஒன்றை கொடுத்தான். அவனது அம்மாவும் இருவரையும் கூப்பிட்டு "விளையாட்டு என்றால் அப்படி, இப்படி இருக்கத்தான் செய்யும் அதை பெரிதுபடுத்தாமல் விட்டுக்கொடுத்து போகவேண்டும். எல்லோரும் ஒற்றுமையாக சேர்ந்து விளையாடுங்கள்," என சமாதானம் கூறி அனுப்பி வைத்தார்.சிறுவர்களும் ஒரு நொடியில் சண்டையை மறந்து ஒற்றுமையுடன் விளையாட்டைத் தொடர்ந்தனர்.

மெல்ல மெல்ல நிலவும் வானின் மேலே நகரத் தொடங்கியது. அனைவரும் முற்றத்தில் சுற்றிலும் ஒரே வட்டமாக அமர்ந்து கொண்டனர். பெண்கள் அனைவரும் உணவு பரிமாற, சிவராமன் அந்த இரவில் அனைவருடன் சேர்ந்து, நிலவொளியில் சாப்பிட்ட அந்த நாளை மறக்க இயலாது. இரவு உணவு முடிந்ததும் பெண்களும் அந்தக் கூட்டத்தில் கலந்துகொண்டனர். மகிழ்ச்சியில் அவர்கள் இரவில் நீண்ட நேரம் அந்த நிலவொளியில் கதை பேசினர். உண்மையில் அப்படிப்பட்ட ஒரு நிகழ்வு, உறவுகளுக்குப் பாலமாக அமைந்தது என்றே சொல்ல வேண்டும்.

"தாத்தா,தாத்தா "என அழைத்தவாறே, மகிழினி அங்கே வந்தாள். "என்ன தாத்தா, பலமான யோசனையில் இருக்கீங்க? நீங்க இன்னும் கிளம்பலையா? நாங்க எல்லோரும் ரெடி ஆயாச்சுத் தாத்தா," என அவசரபடுத்தினாள். ஆமாம் அன்று விடுமுறை தினம் ஆனதால், அவரது மகன் ஒரு "பாட்லக்" விருந்து ஒன்றிற்கு ஏற்பாடு செய்திருந்தான். மறந்தே போய்விட்டார் சிவராமன் "இதோ, ஒரு நொடியில் கிளம்பிடுறேன், குட்டிமா", என்றவர் தோளில் சட்டையை மாட்டத் தொடங்கினார். தமிழினியனின் அம்மா, தான் சமைத்து வைத்திருந்த தக்காளி சாதம், உருளைக்கிழங்கு வருவல், அவரே தயார் பண்ணிய லட்டு முதலியவற்றை டப்பாக்களில் போட்டு ஒரு கூடையில் எடுத்து வைத்தார். தமிழினியனின் அப்பா, காரை எடுத்து வாசலில் நிறுத்தினார். மனது கும்மாளமிட, தமிழினியன் தனது தாத்தாவின் கையை பிடித்தவாறு காரை நோக்கி நடந்தான். அனைவரும் காரில் ஏறி அமர்ந்ததும், ஊருக்கு வெளியே அமைந்திருந்த ஒரு சொகுசு ஹோட்டலுக்கு கார் சென்றது.

அந்த ஹோட்டலின் முகப்புத் தோற்றம் காண்போரை வியப்பில் ஆழ்த்தும் வண்ணம் அழகாக இருந்தது; முன்புறம் பூந்தொட்டிகள், கண்ணைக் கவரும் அலங்கார செடிகளும் இருந்தன; வரவேற்பறையில் அமர்வதற்கு வசதியாக சோபாக்கள் போடப்பட்டுருந்தன. அந்த ஹோட்டலில் உள்ள ஒரு ஹாலை குணசீலனும் அவரது நண்பர்களும் புக் பண்ணியிருந்தனர். ஒவ்வொருவராக நண்பர்கள் அனைவரும் தங்கள் குடும்பத்துடன் வரத்தொடங்கினர். பின்னர் அவர்கள் அனைவரும் அந்த ஹாலுக்குச் சென்றனர்.

அந்த அறை முழுவதும் வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. குளிரூட்டப்பட்ட அந்த அறை வெயில் காலத்திற்கு ஏற்றதாக இருந்தது. அவர்கள் அனைவரும் ஒன்றாக அமர்ந்து அளவளாவுதற்கு ஏற்றவகையில் வட்டமேசை களும் அதைச்சுற்றி நாற்காலிகளும் போடப்பட்டிருந்தன. ஒருபுறம் சிறுவர்கள் விளையாடுவதற்கு இடம் ஒதுக்கப்பட்டிருந்தது. மொத்தத்தில் அந்த இடம் காண்போரை ஈர்க்கும் வண்ணம் அமைந்திருந்தது.

நண்பர்கள் அனைவரும் பரஸ்பர அறிமுகத்திற்கு பின்னர், ஆடவர்கள் ஒரு மேசையை சுற்றிலும், பெண்கள் ஒன்று சேர்ந்து இன்னொரு மேசையை சுற்றிலும் அமர்ந்து கொண்டனர். அங்கு வந்திருந்த முதியவர்களின் மனநிலையைச் சொல்ல வார்த்தைகளே இல்லை. தங்கள் வயதை ஒத்தவர்களைப் பார்த்த பரவசம் அவர்கள் முகங்களில் தாண்டவமாடியது. சிறுவர்கள் துள்ளிக் குதித்துத் தங்களுக்கென ஒதுக்கப்பட்ட இடத்தில் விளையாடத் தொடங்கினார்.அவர்கள் அனைவரும் ஒரு புதிய உலகத்தில் திளைத்தனர்.

ஒருமணி நேரம் சென்றதும் தான் பசி உணர்வு, அவர்களை இவ்வுலகத்திற்கு அழைத்து வந்தது. அவர்கள் அனைவரும் தாங்கள் கொண்டு வந்திருந்த உணவு வகைகளை பரிமாறிக் கொண்டனர். அங்கு உணவுகள் மட்டும் பரிமாறப்பட வில்லை, உணர்வுகள் கூட பரிமாறப்பட்டன, எண்ணங்கள் பரிமாறப்பட்டன, உள்ளங்களின் அன்பு வெளிப்பாடால் அனைவரும் திக்குமுக்காடிப் போயினர். எப்படி அவர்களின் மனது நிறைந்ததோ, அதேபோல் வயிறும் நிறைந்தது. உணவு நேரம் முடிந்த பின்பும், அவர்கள் அனைவரும் இரவு வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தனர். தங்களைச் சுற்றியுள்ள அனைத்து பிரச்சினைகளும் ஒரு நொடியில் காணாமல் போனது.

நேரம் போனதே தெரியாமல் இருந்த அவர்களை ஹோட்டல் ஊழியரின் குரல் தட்டி எழுப்பியது. "மணி பன்னிரண்டு ஆகுது சார். நாங்க ஹோட்டலை அடைக்கும் நேரமிது அதனால அதுக்கு கொஞ்சம் ஒத்துழைப்பு தாங்க சார்," என தயக்கத்துடன் நினைவுபடுத்தினான். "ஓ, நேரம் போனதே தெரியவில்லை,சாரி", என்று சொன்ன நண்பர்கள், "மீண்டும் அடுத்த மாதம் நாம் சந்திக்கலாம்," என்று கூறி விடை பெற்றனர்.

வீடு திரும்பும் போது, தமிழினியன் காரிலேயே தூங்கிவிட்டான். சிவராமனின் மனது மெல்ல அசை போட்டது. அந்த விருந்தில் அவரது பால்ய நண்பன் கோவிந்தனை சந்தித்தார். நீண்ட வருடங்களுக்குப் பின் அந்த சந்திப்பு நிகழ்ந்ததால், இருவருக்கும் பேச நா எழவில்லை. இயல்பு நிலைக்கு திரும்பி வர சில நொடிகள் ஆனது. பள்ளிப் பருவ நண்பனான கோவிந்தன் நன்கு படிப்பான். அதனால் அவனது அப்பா, அவனை அவனது மாமா வீட்டிற்கு படிப்பதற்காக அனுப்பி வைத்தார். அதன் பிறகு இருவரும் சந்திக்கும் வாய்ப்பு கிட்டவில்லை.

இத்தனை வருடங்களில்தான் எத்தனை மாற்றங்கள். இன்றைய உரையாடலின் போது இருவரும் தங்கள் வாழ்க்கையில் நடந்த நிகழ்வுகளை பரிமாறிக்கொண்டனர். படித்து முடித்த கோவிந்தன் அரசாங்கத்தில் ஓர் உயர் பதவி கிடைக்கவே, அங்கேயே தங்கி விட்டார். அவரது அப்பாவின் மறைவுக்குப் பின், அவர் கிராமத்திற்கு திரும்பவே இல்லை.தற்போது அவரது மகன் ஒரு கம்பெனியில் இன்ஜினியராக வேலை பார்க்கிறான். அவரது மகளும் திருமணமாகி அந்த இடத்திற்கு அருகாமையிலேயே வசிக்கிறாள். அதனால் அவருக்கு அந்த நகர வாழ்க்கை பழகிவிட்டது. சிவராமன் தன்னுடைய மனைவி பார்வதியின் மறைவிற்குப் பின்னர் தன்னுடைய மகனுடன் வந்து விட்டதை அவரிடம் கூறினார். இருவரும் வெகு நேரம் பேசியதில் மனது லேசாகி விட்டது. வீட்டிற்கு வந்ததும் அனைவரும் களைப்படைந்து இருந்ததால் உறங்கச் சென்றனர் .

# 6 *நல்ல நண்பன்*

அன்றைய தினம் காலையில் எழுந்திருக்கும் போதே சிவராமனுக்கு உடல் சோர்வாக இருந்தது. இருந்தபோதிலும் எதையும் வெளிக்காட்டிக் கொள்ளாமல், மனதை ஒருநிலைப்படுத்தி உற்சாகத்தை வரவழைத்துக் கொண்டு, தனது தினசரி கடன்களை செவ்வனே செய்து முடித்தார். எல்லா வேலைகளையும் முடித்து விட்டு ஓய்வாக அமர்ந்த அவருக்கு, அப்போதுதான் சட்டென்று நினைவுக்கு வந்தது, மருமகள் பானுமதி கொடுத்துச் சென்ற பலசரக்கு லிஸ்ட். அடடா காலை மணி 11 ஆகி விட்டதே இப்போது கிளம்பினால் மதிய உணவிற்கு வந்து விடலாம் என்று முடிவு பண்ணியவர் சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு உடனே கிளம்பிவிட்டார்.

தெருவில் இறங்கி நடக்கத் தொடங்கினார். அவர்கள் வசிக்கும் தெருவில் இருந்து மூன்றாவது சந்தில் இருந்தது அந்த பெரிய டிபார்ட்மெண்டல் ஸ்டோர்ஸ். ஒரு கையில் குடையைப் பிடித்தவாறு மெல்ல நடந்து கொண்டிருந்த அவரை ஒரு குரல் தடுத்து நிறுத்தியது. அவருக்கு மிகவும் பழக்கப்பட்ட குரல். பின்னால் திரும்பிப் பார்த்த அவர் ஆச்சரியம் கலந்த மகிழ்ச்சியில் வாயடைத்துப் போனார். "நீ... நீ... சந்திரா உன்னை பார்ப்பேன் என கனவிலும் நினைக்கவில்லை," என்று கூறிக்கொண்டே சென்றவர் அவரை கட்டி அணைத்துக்கொண்டார். "சிவராமா, நானும் உன்னை இப்படி வழியில் சந்திப்பேன், என எதிர்பார்க்கவே இல்லை", என்றவர் கண்களில் கண்ணீர் ததும்பியது.இருவரும் அளவில்லா ஆனந்தம் அடைந்தனர்.

நடந்த களைப்பே தெரியாமல் கடையை அடைந்த அவர்கள், வேலையை முடித்த பின் வீட்டுக்குத் திரும்பினர். நீண்ட நாட்களுக்குப் பின் சந்தித்ததால் சந்திரனும் அவருடன் வீட்டிற்கு வர சம்மதித்தார். இருவரும் மதிய உணவிற்குப் பின் அந்த கால நினைவுகளில் மூழ்கினர்.

ஒரு விடுமுறை நாளின் போது நண்பர்கள் ஐந்து பேர் ஒன்றாகச் சேர்ந்து அருகில் உள்ள மலைப்பகுதியில் தங்கள் பொழுதைக் கழிக்க விரும்பினர்.அதிகாலையில் வீட்டைவிட்டு கிளம்பிய அவர்கள் அந்த மலைப்பகுதிக்கு நடந்து செல்ல சுமார் ஒரு மணி நேரம் ஆயிற்று.

அந்த கிராமத்தின் அருகே உள்ள சிறிய மலை அது. மரங்கள் அடர்ந்த அந்த மலை மிகவும் குளுமையாக இருந்தது. "இந்த மலைக்கு நான் இதுவரை வந்ததே இல்லையே, எவ்வளவு உயரமான மரங்கள்" என்று வியப்புடன் கூறியவாறே முன்னே நடந்தவர், சட்டென்று ஓரிடத்தில் நின்றார். அருகிலிருந்த புதருக்கடியில் இரண்டு அழகான முயல் குட்டிகள் நின்றுகொண்டிருந்தன. இவர்களைப் பார்த்ததும் விர்ரென்று வேகமாக ஓடின. நண்பர்கள் அனைவரும் வியப்பு கலந்த ஆச்சரியத்துடன் கூச்சலிட்டனர். மேலே ஏற, ஏற, நடப்பதற்குச் சற்று சிரமமாக இருந்தது. கால்கள் வலிக்கவே அருகில் இருந்த ஒரு பெரிய மரத்தடியில் ஓய்வெடுக்க அமர்ந்தனர். அந்த மரம் முழுவதும் வெளிர் நிறப் பூக்கள் பூத்திருந்தன.அதில் அமர்ந்து இருந்த சிறிய பறவைகளின் ஒலி மனதிற்கு மிகவும் இதமாக இருந்தது. சிறிது நேரம் கழித்ததும், மீண்டும் நடக்கத் தொடங்கினர். அருகினில் நீரின் சலசலப்பு ஓசை கேட்டதும், அந்த திசையை நோக்கி நடந்தனர். சிறுசிறு பாறைகளைக் கடந்து சென்றபின் ஒரு சிறிய அருவி கண்ணில் தென்பட்டது. அளவிலா ஆனந்தத்துடன் நண்பர்கள் அனைவரும் குளித்து மகிழ்ந்தனர். குளித்து முடித்த பின் மீண்டும் நடக்கத் தொடங்கினர். பசி வயிற்றைக் கிள்ளவே அங்குமிங்கும் தேடி அலைந்தனர்.

கடைசியாக ஒரு நாவல் மரத்தில் இருந்த பழங்களைப் பறித்துச் சாப்பிட்டனர். போகப்போக அந்த இடம் மரங்கள் அடர்ந்து கொஞ்சம் இருட்டாக காணப்பட்டது. அவர்களுக்கு கொஞ்சம் பயம் பற்றிக் கொள்ளவே, சற்று வேகமாக நடக்கத் தொடங்கினர். அப்போதுதான் ஒரு காட்டு யானை அருவிக்கரையில் நீர் அருந்திவிட்டு வரும் வழியில் அவர்களை கவனித்து விட்டது. மனிதர்களைக் கண்டதும் அந்த யானை அவர்களை விரட்ட ஆரம்பித்தது. நண்பர்கள் மிரண்டு வேகமாக ஓடினர். ஓடும் வேகத்தில் சிவராமன் கீழே விழுந்து விட்டான். யானையோ அவனது அருகில் வந்துவிட்டது. பயத்தில் அவனுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. அப்போதுதான் அவனுடைய நண்பன் சந்திரன் ஒரு காரியத்தைச் செய்தான். அருகில் இருந்த ஒரு பெரிய மரக்கிளையை ஒடித்து யானையின் முன்னே நீட்டினான்.யானையின் கவனம் திரும்பியது. கண்ணிமைக்கும் நேரத்தில் சிவராமன் எழுந்து ஓடினான். மரக்கிளையை யானையிடம் தந்துவிட்டு, சந்திரனும் அந்த இடத்தை விட்டு நகர்ந்தான். நண்பன் மாட்டிக்கொண்டான் என்றதுமே, தன் நண்பனின் உயிரை எப்படியாவது காப்பாற்றிவிட வேண்டும் என்ற எண்ணத்தோடு சமயோசித புத்தியோடு செயல்பட்ட தன் நண்பனுக்கு மனதார நன்றி சொன்னான் சிவராமன். இன்றளவும் மறக்க முடியாத ஒரு நிகழ்வு அது.

அதன் பின்பு, இருவரும் மிகவும் நெருக்கமாக பழகி வந்தனர். குடும்பத்தில் உள்ள எல்லா பிரச்சினைகளையும் இருவரும் பகிர்ந்து கொண்டனர். அது அவர்களுக்கு ஆறுதலையும் நல்ல நம்பிக்கையையும் கொடுத்தது. காலச் சூழ்நிலையின் காரணமாக இருவரும் பிரிய நேரிட்டது.

கடிகாரத்தில் மணி நான்கு அடிக்கும் ஒலி கேட்டு, இருவரும் இவ்வுலகிற்கு திரும்பினர். சிவராமன் சந்திரன் இருப்பிடம் பற்றியும் அவரது குடும்பத்தைப் பற்றியும் கேட்டு அறிந்துகொண்டார். சந்திரனும் மகிழ்வுடன் சிவராமனின் குடும்பத்தைப் பற்றித் தெரிந்து கொண்டார். இனி அவ்வப்போது சந்தித்துக் கொள்ளலாம் என்ற மன நிம்மதியுடன் விடைபெற்றுச் சென்றார் சந்திரன்.

அவர் சென்ற பின்பும் சிவராமன் பழைய நினைவுகளில் மூழ்கி இருந்தார். ஒருவரின் வாழ்க்கையில் நண்பன் என்ற ஒருத்தர் எவ்வளவு முக்கியம் என்பதை புரிந்துகொண்டார். அவருக்கு அப்படி ஒரு நல்ல நண்பன் அமைந்ததை எண்ணி மன நெகிழ்வடைந்தார்.

மாலையில் வீடு திரும்பிய தமிழினியன், சிற்றுண்டி அருந்திய பின் தன் நண்பனின் வீட்டிற்கு சென்றுவிட்டான். இரவு ஏழு மணிக்குத் திரும்பி வந்த அவன் தாத்தாவிடம் நேராக வந்தான் 'என் நண்பன் சுரேஷின் வீடு அடுத்த தெருவில் உள்ளது. அவன் எனக்கு மிகவும் நெருங்கிய நண்பன்; ரொம்ப நல்லவன் தாத்தா ' என்றான்.' அப்படியா! நல்ல விஷயம். நல்ல நண்பர்கள் தான் நம் வாழ்க்கையில் நமக்கு கிடைத்த பொக்கிஷம்' என்றார் தாத்தா. 'ஆமாம் தாத்தா , எனக்கு கிடைத்த எல்லா நண்பர்களுமே மிகவும் நல்லவர்கள் அதிலும் குறிப்பிட்டு சொல்ல வேண்டுமானால் சுரேஷ் மிக மிக நல்லவன் உண்மையானவன் நேர்மையானவன் அவனை எனக்கு மிகவும் பிடிக்கும் தாத்தா' என்று கூறினான் நெகிழ்ச்சியுடன். 'ஆமாம். என்ன விஷயம் இப்பொழுது அவனை பார்த்துவிட்டு வருகிறாயா/', என மென்மையுடன் விசாரித்தார் சிவராமன் '. ஒன்றும் இல்லை தாத்தா இன்னைக்கு பள்ளியிலே ஒரு விஷயம் நடந்தது அதனால் தான்', என தயங்கினான். 'என்ன கண்ணா, என்ன நடந்தது தயங்காமல் சொல்லு', எனக் கேட்டார் தாத்தா. 'இல்ல தாத்தா, நானும் எனது நண்பர்களும் உணவு இடைவேளையின் போது பள்ளி விளையாட்டு மைதானத்தில் கிரிக்கெட் விளையாடுவோம் .அதற்கு நான் சுரேஷை கூப்பிட்ட பொழுது அவன் வரமாட்டேன்னு சொல்லிட்டான் தாத்தா. அதுக்கு பதிலா எங்க கிளாஸ்ல படிக்கும் வேணுவுடன் கேரம் விளையாடினான் . வேணு ஒரு மாற்றுத்திறனாளி .அவனால் சரியாக நடக்க முடியாது. இன்னைக்கு மட்டுமில்ல சில நாட்களாவே அவனோடுதான் விளையாடுகிறான் என்னோடு விளையாடுவதில்லை அதனால் ஆத்திரத்தில் சண்டை போட்டு அவனை அடித்துவிட்டேன் தாத்தா. ஆனால் அதற்கு அவன் அமைதியாக ஒன்றும் பேசாமல் இருந்து விட்டான். எனக்கு மனசே கேட்கவில்லை. நான் அவனை அடித்தது தவறு என்பதை உணர்ந்து, அதற்கு மன்னிப்பு கேட்பதற்கு தான் அவனுடைய வீட்டிற்கு சென்றேன்', என்று கூறினான், மனம்திறந்து. 'ஓ நல்ல காரியம் செய்தாய். சுரேஷ் உன்னை மன்னித்து விட்டானா,

என்ன சொன்னான்/', எனக் கேட்டார் தாத்தா. ஆமாம் தாத்தா. அவன் சொன்னான் உன்னோட விளையாட நிறைய நண்பர்கள் இருக்கிறார்கள் ஆனால் வேணு உடன் விளையாட யாருமே இல்லை அவன் தனியாகவே இருக்கிறான். அதனால் தான் அவனோடு விளையாடுகிறேன் அவனுடைய மன நிலையை பற்றி கொஞ்சம் யோசித்துப் பார் எனக் கூறினான் தாத்தா, என்றான் தமிழினியன்.

"உண்மைதான் சுரேஷ் மிக நல்ல நண்பன். அடுத்தவர் நலனை கருத்தில் கொண்டு உதவிக்கரம் நீட்டும் ஒருவன், உலகத்தில் மிக உயர்ந்த உள்ளம் கொண்டவன். அப்படிப்பட்ட ஒருவனை நண்பனாக அடைந்ததற்கு நீ பெருமைப்பட வேண்டும் "என்று பெருமிதத்துடன் கூறினார் தாத்தா. எக் காலத்திலும் நமக்கு உறுதுணையாக நிற்பவர்கள் நல்ல நண்பர்களே .மனதில் ஏற்பட்ட திரை விலகி தெளிந்த மனதுடன் உறங்கச் சென்றான் தமிழினியன்.

# 7 திருவிழா

மறுநாள் காலை எட்டு மணி இருக்கும். அனைவரும் காலை உணவிற்கு தயாராகும் போது, வீட்டின் அழைப்பு மணி ஒலித்தது. ஓடிச்சென்று கதவைத் திறந்த தமிழினியன் சற்றே குழப்பத்துடன், "உள்ளே வாங்க,"என்று கூறினான். பின்னாலேயே சென்ற குணசீலா "உள்ள வாங்க அண்ணன், நல்லா இருக்கீங்களா ?"என சிரித்த முகத்துடன் வரவேற்றார். உள்ளே நுழைந்த முத்து "நல்லா இருக்கோம் குணசீலா, நீங்க எல்லோரும் நல்லா இருக்கீங்களா? பார்த்து பல வருஷங்கள் ஆச்சு," என்று சொன்னார். சிவராமன் அருகில் சென்ற முத்து"உங்க உடம்பு இப்ப நல்லா இருக்குல்ல, சித்தப்பா" என வாஞ்சையுடன் விசாரித்தார்.

ஒரு சிறிய குசலம் விசாரிப்புக்குப்பின், அனைவரும் ஒன்றாக அமர்ந்து சாப்பிட்டனர். "காலையில் வந்தால்தான் உங்கள் அனைவரையும் பார்க்க முடியும் என்பதால்தான் நேற்றிரவே கிளம்பி வந்துவிட்டேன்", என்றார். "என்னப்பா, வேறு என்ன விசேஷம்?" என்று வினவினார் சிவராமன். "வேறு ஒன்றுமில்லை. எனது வியாபார விஷயமாக ஒருத்தரைச் சென்னையில் பார்க்க வேண்டி இருந்தது. அப்படியே உங்களை எல்லாம் பார்த்து விட்டுப் போகலாமே எனத் தோன்றியது. அது போக இந்த வருஷம் நம்ம ஊர்ல பங்குனித் திருவிழா ரொம்ப விசேஷமா நடக்க உள்ளது. நீங்கல்லாம் பார்த்து ரொம்ப வருஷம் ஆகுதில்ல அதான் கூப்பிடலாம் என வந்தேன். பசங்களுக்கு லீவு டைம் வேற அவங்களும் நம்ம கிராமத்தைப் பார்த்த மாதிரி இருக்கும்.ஒரு தடவை எல்லாரும் கிராமத்துக்கு வாங்களேன் நாங்கெல்லாம் மிகவும் சந்தோஷப் படுவோம்" என அழைப்பு விடுத்தார். உடனே, "ஐய்யா, ஒரே கொண்டாட்டந்தான்', எனக் குதித்தான் தமிழினியன்."எங்களுக்கும் கிராமத்துக்கு வர ஆசையாத்தான் இருக்குது", என்றார் சிவராமன்."பார்ப்போம் அண்ணன். எனக்கு ஆபிசில் கொஞ்சம் ப்ரீயா இருந்தா நாங்கள்லாம் கண்டிப்பா இந்த தடவை வர்றோம் .நீங்களும் ஒவ்வொரு தடவையும் கூப்பிடுறீங்க", என்றார்,குணசீலன். பானுமதியும், "ஆமாம், ஆமாம் நாங்க கண்டிப்பாக இந்த தடவை வர்றோம். திருவிழா அடுத்த வாரம் தானே ஒரு வாரம் வந்து தங்குகிறோம்," என்றாள். முத்துவும் மகிழ்வுடன் விடை பெற்று அவரது வேலையை கவனிக்கச் சென்றார்.

அன்றைய தினம் பள்ளியிலிருந்து வீடு திரும்பிய தமிழினியனுக்கு இருப்புக் கொள்ளவில்லை. தாத்தாவிடம் சென்ற அவன் "எப்ப கிராமத்துக்குப் போவோம், திருவிழாவை பார்ப்போம் என ஆசையா இருக்கு தாத்தா,"என்றான். "எனக்கும் கிராமத்துக்குப் போய் உறவினர் அனைவரையும் பார்க்க வேண்டும் என தோன்றுகின்றது" என்றார் சிவராமன் பதிலுக்கு. இரவு வீடு திரும்பிய குணசீலன்,

மனைவியிடம் "அடுத்த வாரம் உனக்கு லீவு கிடைப்பதில் ஏதும் சிரமம் இருக்கா?" என கேட்டார். "நான் லீவு கேட்டு விட்டேன்.அதற்கு அனுமதியும் கிடைத்து விட்டது. நாம திருவிழாவுக்குப் போகலாம்,"என்றாள். நேராக அப்பாவிடம் சென்ற குணசீலன் விஷயத்தைச் சொன்னார்."எங்கள் இருவருக்கும் லீவு எடுப்பதில் எந்தவித சிக்கலும் இல்லை. பசங்களுக்கும் அடுத்த வாரம் முதல் லீவு ஆரம்பிக்கிறது. அதனால நாம எல்லாரும் இந்த சனிக்கிழமை ஊருக்கு கிளம்பறோம்,"என்றார். இதைக்கேட்ட அனைவரது உள்ளத்திலும் சந்தோஷம் பொங்கியது.

திட்டமிட்டபடி சனிக்கிழமை இரவு எட்டு மணிக்குத் தங்கள் காரிலேயே பயணத்தைத் தொடங்கினர். அதிகாலை நேரம், மெல்லிய தென்றல் காற்று முகத்தில் தவழ முகம் மலர்ந்து வெளியே நோக்கினர். எங்கு நோக்கினும் பசுமை கண்ணுக்குத் குளிர்ச்சியாய் அமைந்தது. கிராமத்தை நெருங்கி விட்டோம் என்ற உணர்வு சிவராமன் மனதில் கிளர்ச்சியூட்டியது. கிராமத்தில் அவர் வாழ்ந்து வந்த வீட்டை அடைந்தனர் அனைவரும் வந்த களைப்புத் தீர குளித்தனர். அப்போது அங்கு வந்த முத்து அவர்கள் அனைவரையும் காலை உணவிற்கு பக்கத்தில் உள்ள அவரது வீட்டிற்கு அழைத்துச் சென்றார். இரண்டு குடும்பத்தினரும் உறவாடி மகிழ்ந்தனர். மதிய உணவிற்குப் பின் வீட்டுக்குத் திரும்பிய அவர்கள் சிறிது நேரம் ஓய்வெடுத்தனர்.

அவர்கள் வந்த சேதி தெரிந்ததும் அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்கள் உறவினர்கள் என நிறையபேர் அவர்களை பார்க்க மாலையில் வந்தனர். பேச்சு, சிரிப்பு, விளையாட்டு என நேரம் போவதே தெரியாமல் அனைவரும் உற்சாகமாக இருந்தனர்.இதே நகரமாக இருந்தால் அடுத்த வீட்டு விவகாரம் நமக்கெதுக்கு என அமைதியாக இருந்திருப்பர். ஆனால் இது கிராமாயிற்றே உறவுகள் தானே முக்கியம்.

அடுத்த நாள் காலையில் சிவராமன், மகிழினியையும் தமிழினியனையையும் கூட்டிக்கொண்டு தோட்டத்துப் பக்கம் வாக்கிங் போனார். தோட்டத்தை அவரது உறவுக்காரப் பையன் ஒருத்தன் மேற்பார்வை பார்த்து வந்தான்.தோட்டத்தில் வண்ண வண்ணப் பூக்கள் பூத்துக் குலுங்கின. இன்னொரு பக்கம் காய்கறிச் செடிகள் கத்தரி, வெண்டை, மிளகாய், தக்காளி எனக் காய்த்திருந்தன. ஓர் ஓரத்தில் முருங்கை, எலுமிச்சை, மா, கொய்யா, தென்னை போன்ற மரங்கள் இருந்தன. அதிகாலைப் பொழுது இளம் வெயில் உடலுக்கும், மனதுக்கும் இதமாக இருந்தது. தோட்டத்தில் உள்ள பன்னீர் ரோஜாக்களை தேனீக்கள் சுற்றிச்சுற்றி வந்தன. மல்லிகை, செவ்வந்தி, செம்பருத்தி என வண்ணமயமாய் இருந்தது அந்த இடம். அங்கு பறந்த தேனீக்கள், பட்டாம் பூச்சிகளைப் பார்த்த தமிழினியனுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. அருகில் உள்ள புல்லின் மீது அமர்ந்திருந்த ஊசித்தட்டானை பிடிக்க முயன்றான். ஆனால் அது பறந்துவிட்டது. மகிழினிக்கு அந்த பூந்தோட்டம் மிகவும் பிடித்துப் போய்விட்டது. அடுத்ததாக காய்கறிச்

செடிகளில் காய்களைப் பார்க்கவே, அதைப் பறிக்கும் ஆர்வம் ஏற்பட்டது.அன்றைய சமையலுக்குத் தேவையான காய்கறிகளை தாங்களே தோட்டத்தில் இருந்து பறித்துக் கொண்டனர். பூத்துக்குலுங்கிய மாமரமும் காய்கள் நிரம்பிய கொய்யா மரமும் அவர்கள் கண்ணைக் கவர்ந்தன. அவர்கள் வாழும் சென்னையில் இப்படி தோட்டத்துடன் கூடிய வீடுகளை பார்ப்பது மிக அரிது. நெருக்கமான வீடுகள் உயரமான கட்டிடங்களை மட்டுமே பார்த்துப் பழகிய அவர்கள் கண்களுக்கு அந்த இடமே சொர்க்கமாகத் தெரிந்தது. இயற்கையோடு இயைந்து வாழும் வாழ்க்கையே இன்பம் பயக்கும் என்ற உண்மை புரிந்தது.

அந்த ஊரின் நடுவே அமைந்திருந்த வண்டிமலைச்சி அம்மன் கோயிலில் திருவிழாவிற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. ஆங்காங்கே ஒலிபெருக்கிகளும், விளக்குகளும் பொருத்தப்பட்டன. தெருவெங்கும் தோரணங்கள் கட்டப்பட்டன. விருந்தினர் வருகையால் ஊரே களைகட்டியிருந்தது.

ஒரு வாரக் கொண்டாட்டத்தின் முதல் நாளான ஞாயிறு இரவு நாதஸ்வர இசைக் கச்சேரி நடந்தேறியது. மேளக் கலைஞர்களுடன் சேர்ந்து வாசிக்கப்பட்ட நாதஸ்வர இசையின் மங்கல ஒலி மனதில் ஓர் நேர்மறையான எண்ணத்தை ஏற்படுத்தியது.அடுத்த நாள் இரவு கரகாட்டம் நடைபெற்றது. அலங்கரிக்கப்பட்ட கரகத்தை தலையில் ஏந்தி அவர்கள் ஆடிய விதம் காண்போரை வியக்க வைத்தது . செவ்வாய்க்கிழமை மாவிளக்கு பூஜை நடந்தது. பெண்கள் அனைவரும் தங்கள் வீடுகளில் இருந்து மாவிளக்கு எடுத்து வந்து அம்மனுக்கு செலுத்தி பூஜை செய்தனர்.அதற்கும் அடுத்த நாள் முளைப்பாரி. அந்த முளைப்பாரி பாட்டும், அதற்குப் பெண்கள் அடித்த கும்மியும் பார்த்த மகிழினிக்குத் தானும் அதுபோல் கும்மியடிக்க ஆசை மிகக் கொண்டாள். அடுத்தடுத்த நாட்களில் வில்லுப்பாட்டு, பொய்க் குதிரை ஆட்டம் என அந்த ஊரே கோலாகலப்பட்டது.

அனைவரும் தங்கள் கவலைகளை எல்லாம் மறந்து, அந்த ஒரு வாரமும் மகிழ்ச்சியில் திளைத்தனர். ஊரின் ஒதுக்குப்புறத்தில் குடை ராட்டினமும், சில கடைகளும் அமைக்கப்பட்டிருந்தன. குணசீலனும் தனது குடும்பத்தாருடன் அங்கு சென்றார். குடை ராட்டினத்தில் மகிழினியும் தமிழினியனும் சுற்றி மகிழ்ந்த போது, தாங்கள் கண்காட்சியில் சுற்றிவந்த ஜெயன்ட் வீல் ஞாபகத்திற்கு வந்தது. ஆமா ஆமா போன வருஷம் ் சித்திரைக் கண்காட்சில் மகிழினி கப் வீல் சுற்றிவர, தமிழினியன் ஜெயண்ட் வீல் சுற்றி வந்தான். இவன் தான் நிறைய விளையாட்டு சாமான்கள் வாங்கி மகிழ்ந்தான். தாத்தா அங்குள்ள சித்த மருத்துவ கடையில் சில பொருட்களை வாங்கினார். அந்த பஞ்சு மிட்டாய் கடைகளும் டெல்லி அப்பள கடைகளும் தான் அந்த கண்காட்சிக்கு முத்திரை பதித்தது போல இருக்கும். அந்த பஞ்சு மிட்டாயை சுவைத்தவாறே கண்காட்சியை சுற்றி வர மனது துள்ளும். இப்படியே யோசித்துக் கொண்டே நடந்து வந்தவன் கண்ணில் கமர்கட் மிட்டாய்கள பட்டன .அங்கு விற்கப்பட்ட கமர்கட் மிட்டாய் வகைகளை சுவைத்தனர் கலர்கலராய் பலூன்களை வாங்கி மகிழ்ந்தனர்.

உண்மையில் அந்த ஒரு வாரம் போனதே தெரியவில்லை. அவ்வளவு இனிமையாக அமைந்தது. அந்தக் காலத்தில் உழைத்துச் சோர்ந்த மக்களுக்கு உற்சாகமூட்டும் விதமாகவே இந்த திருவிழா ஏற்படுத்தப்பட்டது. தை மாத அறுவடைக்குப் பின்னர் தங்கள் ஊரின் தெய்வங்களை கொண்டாடி மகிழ்ந்தனர். இன்னும் சொல்லப்போனால் இந்தத் திருவிழாக்கள், உடல் சோர்வையும், மனச்சோர்வையும் போக்கி, மக்கள் மனதிற்கு புத்துணர்ச்சி அளிக்கின்றன.

இன்றைய காலத்தில் மக்களின் மனச்சோர்வை போக்கும் விதமாக பல நிகழ்வுகள் உள்ளன.டூரிங் தியேட்டர்கள் இன்று பிரம்மாண்ட தியேட்டர்களாக வளர்ந்து உள்ளன.தொலைக்காட்சிவீடியோ கேம் என தனிமையில் பொழுதைக் கழிக்கும் வகையில் இவைகள் அமைவதால் நம் உள்ளத்திற்கு முழுமையான உற்சாகம் கிடைப்பதில்லை.உற்சாகமூட்டும் விளையாட்டுகள் வெளி அரங்குகளில் நடக்கும் சில நிகழ்ச்சிகள், சுற்றுலா செல்வது , உண்மையில் நள்மை பயக்கின்றன அதனால் நம்முடைய மனநலம் மேம்படுகிறது.

# 8 கூடி வாழ்ந்தால் கோடி நன்மை

படுக்கையில் புரண்டு புரண்டு படுத்த சிவராமனுக்குத் தூக்கம் வரவில்லை.,. அவரது மனைவி பார்வதியின் முகம் கண்முன்னே நிழலாடியது. பழைய நினைவுகள் அலை மோத அவரது உள்ளம் பின்னோக்கிச் சென்றது.

சுமார் இருபது வருடங்களுக்கு முன்பு நடந்த வேதவல்லியின் திருமணம் கண்முன்னே வந்து போனது ஒருவர் அதிரசத்துக்கு மாவு இடிக்க இன்னொருவர் பக்குவமாக பாகு காய்ச்சி கொண்டிருந்தார். ஒரு வாரமாகவே உறவினர்கள் அனைவரும் தங்கி திருமண ஏற்பாடுகளை செய்து கொண்டிருந்தனர. அதனால் வீட்டில் தினமும் விருந்துச் சாப்பாடு தான். பெண்டிர் அனைவரும் ஒன்றாக சேர்ந்து சிரித்து மகிழ்ந்தபடி வேலை செய்தனர் அதனால் அவர்களிடையே ஒரு நெருக்கம் வளர்ந்தது அவர்கள் இடையே ஏற்படும் சிறு சிறு பூசல்கள் கூட வினாடியில் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடும்.

ஆண்கள் தோரணம் கட்டுவது, வீட்டின் முன்னே மண்ணாலாகிய மண மேடை அமைப்பது, சாமான்கள் வாங்குவது போன்ற வேலைகளை சுறுசுறுப்பாக செய்து கொண்டிருந்தன்ர். அதனால் வேலைகள் அனைத்தையும் தனியாளாக சுமக்கும் அவல நிலை அங்கு இல்லை. மாறாக மகிழ்ச்சி அங்கே குடிகொண்டிருந்தது

அந்த கல்யாண வீட்டில் முறைப்படி சடங்குகளும் சம்பிரதாயங்களும் நடந்தன. அந்த காலத்து முறைகள் அனைத்துமே அர்த்தமுள்ளதாகத்தான் இருந்தது. மஞ்சள் குத்துவதில் ஆரம்பித்தது மங்கலகரமாக. பின்பு தாம்பூலம் வைத்து அனைவரையும் ஒரு நாள் முன்னதாகவே திருமணத்திற்கு அழைத்து ஆகிவிட்டது, முதல்நாள் மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலம், பெண் அழைப்பு என ஒரே கோலாகலம். அப்போதுதான் தெரியும் யார் மாப்பிள்ளை யார் மணப்பெண் யார் என்று. ஊரறிய கல்யாணம் நடக்கும். மங்கல வாத்தியம் முழங்க மாப்பிள்ளை மணப்பெண் கழுத்தில் தாலி கட்டுவார். அதன் பின்பு நீர் நிறைந்த பானைக்குள் மோதிரம் தேடுவது, ஊஞ்சலில் வைத்து ஆட்டுவது, தேங்காய் உருட்டுதல் போன்ற விளையாட்டுகள் நடக்கும். இது முன்பின் அறிமுகமில்லாத மணமக்கள் ஒருவர் முகத்தை மற்றவர் பார்த்து பழகிக் கொள்ளச் செய்யப்பட்ட ஏற்பாடு ஆகும். நாணம் கொஞ்சம் விலகி மணப்பெண் அப்போதுதான் மாப்பிள்ளை முகத்தை ஏறெடுத்து பார்ப்பாள்.

அந்த இனிமையான சுவையான நிகழ்வுகள் இன்றைய காலகட்டத்தில் இல்லை. இன்று உறவினர்கள் பெரும்பாலும் தாலி கட்டும் நேரத்திற்கே வருகின்றனர். மணப்பெண்ணும் மாப்பிள்ளையும் நன்கு அறிமுகமான பின்னரே திருமணங்கள் நடக்கின்றன அதனால் அவர்கள் வாழ்க்கையில் உள்ள சுவாரசியமான அனுபவங்கள் கொஞ்சம் குறைகின்றன. ஓரிடத்தில் வளர்ந்த நாற்றைப் பிடுங்கி வேறு இடத்தில் நடப்படும் நெல் நாற்று போன்றவள் பெண். காலத்தில் நடப்படும் நாற்று வளர்ந்து முற்றிய கதிரை தரும். அதே மாதிரி தக்க பருவத்தில் திருமணமாகி புகுந்த வீடு செல்லும் பெண்கள் அந்த வீட்டோடு ஒன்றிணைந்து விடுவர். அவர்களுக்குள் வேற்றுமையான எண்ணம் வருவதில்லை. அதனால் குடும்ப பிரச்சனைகள் அந்த காலத்தில் சற்று குறைவாகவே காணப்பட்டன அப்படியே பிரச்சனைகள் வந்தாலும் சகிப்புத்தன்மை அவர்களை மாற்றிவிடும்.

அவரும், பார்வதியும், குழந்தைகளும், உறவினர்களும் என நாட்கள் சந்தோசமாக நகர்ந்தன. அப்போது தான் புயல் அடித்தது போல் அந்தச் சம்பவம் நிகழ்ந்தது. அவருடைய தங்கை மீனாட்சியின் கணவர் வேலாயுதம் கிணற்றில் தவறி விழுந்து தலையில் பலத்த அடிபட்டது. அழுது புரண்டு அனைவரும் ஓடிச்சென்று காப்பாற்ற எவ்வளவோ முயற்சி செய்தனர். ஆனால் பலன் ஏதும் இன்றி அவர் இறந்துவிட்டார் . கைக்குழந்தையுடன் செய்வதறியாது திகைத்து நின்ற மீனாட்சியை அவரும், பார்வதியும், அவர்களை வீட்டிற்கு அழைத்து வந்து தங்களுடனேயே தங்க வைத்தனர். சுற்றி இருந்த சுற்றத்தார் அனைவரும் தினமும் அவளுக்கு ஆறுதல் கூறி மனதிற்கு தைரியமூட்டினர். அந்தத் துயரச் சம்பவத்தை இன்று நினைத்தாலும் மனது பதைபதைக்கிறது. ஒருவழியாக அதிலிருந்து மீண்ட மீனாட்சி தற்போது அதே தெருவில் நான்கு வீடுகள் தள்ளி தனது மகனுடன் நன்றாக வாழ்கிறாள். அன்று மட்டும் அவள் மனம் தளர்ந்து இருந்தால் என்ன நடந்திருக்கும் நினைத்துப்பார்க்கவே நெஞ்சம் நடுங்குகின்றது.

அந்த கிராமத்தில் தங்கி இருந்த நாட்களில் சிவராமன் அங்கே இருந்த தனது நண்பர்களை சந்திக்க தவறவில்லை.அவரின் நெருங்கிய நண்பனான சின்னையன்,தான் பிறந்து வளர்ந்த அந்த கிராமத்தை விட்டு எங்கும் வர மறுத்துவிட்டார். இன்னமும் அந்தச் சின்னஞ் சிறிய ஓட்டு வீட்டில் ஒத்தை ஆளாக வசித்து வருகிறார்.அந்த ஊரில் சிறிய கடை ஒன்றை நடத்தி வந்தார். வியாபாரத்தில் நஷ்டம் ஏற்படவே மனமுடைந்து போனார். அவருடன் கூட இருந்த நண்பர்கள் அவருக்கு உதவ முன் வந்தனர். இந்தக் காலம் மாதிரி அந்தக் காலத்தில் பேங்க் லோன் போன்ற வசதிகள் எல்லாம் கிடையாது. அதனால் அவரது நெருங்கிய நண்பர்கள் அவர்களால் ஆன உதவிகளைச் செய்து அவரை தூக்கி விட்டனர். அந்த காலத்து மக்களிடையே உணர்வுபூர்வமான நெருக்கம் இருந்தது. தங்களுடைய உணர்வுகளை, எண்ணங்களை தங்களுக்கு நெருக்கமானவர்களிடம் பகிர்ந்து கொண்டனர். அதனால் மனப்பாரம் குறைந்து,

மன இறுக்கம் இல்லாமல், கஷ்டத்தை கூட இயல்பாக எடுத்துக் கொண்டனர். வாழ்க்கையில் எதிர்நீச்சல் போடும் அளவு மனத்துணிவு இருந்தது. நம் கஷ்டங்களை பகிர்ந்து கொள்ளும்போது, உறவினர்களோ, நண்பர்களோ, உதவிக்கரம் நீட்டினர் மகிழ்ச்சியான தருணங்களில் அங்கு சந்தோஷம் இரட்டிப்பாகிறது.

அந்த காலத்தில் மக்கள் கள்ளம் கபடம் இல்லாமல் பழகினர். ஒருவருக்கு உடல்நலம் சரியில்லை என்றால் தயக்கம் ஏதுமின்றி பக்கத்து வீட்டிலிருந்து உணவு அவர்களுக்கு கிடைக்கும். ஏதாவது பலகாரம் பண்ணினாலும் ஒருவரை விட்டு ஒருவர் சாப்பிடுவதில்லை. இப்படி ஒற்றுமையுடன் வாழும் வாழ்க்கையில் தான் எத்தனை நன்மைகள் இருக்கின்றன.

இப்படியாக, அந்தக் கால மக்கள் அனைவரும் உணவு, உதவி, உணர்வுபூர்வமாக பின்னிப்பிணைந்து வாழ்ந்தனர். இப்படி ஒற்றுமையுடன் கூடி வாழ்ந்ததால், அவர்களால் வாழ்க்கையில்,துணிச்சலுடன் வாழ முடிந்தது. போட்டி, பொறாமை போன்றவை அவர்களுக்குள் அதிகம் வரவில்லை. விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை மேலோங்கி இருந்தது.

தற்போதைய வாழ்க்கை நிலையில் தான் எத்தனை எத்தனை மாற்றங்கள். மனிதன் தன் சொந்த காலில் தனியாக நிற்கவே ஆசைப்படுகிறான். அந்த எண்ணத்தில் தப்பேதும் இல்லை. அவருடைய நெருங்கிய நண்பன் நடராஜன் மகன் காதலித்து ராதா என்ற பெண்ணை மணந்து கொண்டான். இரண்டு குடும்பங்களும் அதனை ஏற்றுக் கொள்ளாமல் போகவே, இருவரும் தனித்து வாழ்ந்தனர். திருமணமாகி ஆறு மாதங்கள் மிகவும் சந்தோஷமாக கழிந்தன. ராதாவும் படித்த பெண் என்பதால் அங்கு புரிதல் இருந்தது. இருவரும் அன்பு வெள்ளத்தில் திளைத்து, இந்த உலகையே மறந்து ஆனந்தத்தில் திளைத்திருந்தனர். அப்போதுதான் அந்த பூகம்பம் நிகழ்ந்தது. ஆம் ஒரு விடுமுறை நாளன்று தங்கள் காரில் இருவரும் மகாபலிபுரம் நோக்கி பயணம் செய்து கொண்டிருந்தனர். எதிரே அசுர வேகத்தில் வந்த லாரி மோதியதில் அந்த இடத்திலேயே நடராஜன் மகன் பலியானான். ஆனால் ராதா சிறு சிறு காயங்களுடன் உயிர் தப்பினாள். அவளின் நிலையை இன்று நினைத்தாலும் மனது பதறுகிறது. தனித்துவிடப்பட்ட இந்த உலகத்தில் வாழ சந்தித்த பிரச்சினைகளும், அவமானங்களும் ஏராளம். இன்றும் தனிமையில் வாடும் அந்த பெண்ணை பார்க்கும் போதெல்லாம் சிவராமனுக்கு நெஞ்சில் ஈரம் சுரக்கும். தன்னால் இயன்ற போது அந்தப் பெண்ணுக்கு தன்னம்பிக்கை ஊட்டும் வண்ணம் பேசுவார்.

அந்தக்கால மக்கள் பெரிய பெரிய குடும்பங்களாக, தாங்கள் பிறந்து வளர்ந்த கிராமங்களிலேயே வசித்தனர். அவர்களுக்கு இடம் பெயர வேண்டிய அவசியம் இருக்கவில்லை. ஏன்? அந்தக் காலத்தில் அறிவியல் வளர்ச்சி அடையவில்லை. போக்குவரத்து வசதிகள் இல்லை. மக்கள் ஓர் இடத்திலிருந்து வேறொரு இடத்திற்குச் செல்வதற்கு மாட்டு வண்டிகளை பயன்படுத்தினர். பாரம் சுமப்பதற்கு பெரும்பாலும் கழுதைகளை உபயோகித்தனர் .கழுதை முகத்தில் விழித்தால் அதிர்ஷ்டம் என்று நம்பிய மக்களுக்கு, இன்று கழுதையைப் பார்க்கவே முடியாது. நாம் பயன்படுத்தாமல், பராமரிக்காமல் விட்டு விட்டதால் பல உயிரினங்கள் இன்று அரிதாகி வருகின்றன. அவைகள் நம்மை அறியாமலேயே நமது வாழ்க்கைக்கு ஏதோ ஒரு வகையில் தொடர்பு உடையதாக இருந்திருக்கின்றன .உதவி செய்திருக்கின்றன. இதை அந்த உயிரினத்தின் அழிவுக்கு பின்னரே நம்மால் உணர்ந்து கொள்ள இயலும்.

முக்கிய தொழில் உழவு தொழில் ஆகவே அமைந்தது. மக்களின் அத்தியாவசிய தேவைகளில் உணவு முதன்மையானது. அது தவிர மக்கள் தங்கள் குலத் தொழில்களைச் செய்து வந்தனர் .அதனால் அங்கு உணவு பஞ்சம், வேலையில்லாத் திண்டாட்டம் போன்றவை இல்லை. கிடைத்த வேலையை முழுமனதோடு செய்து மிகவும் மகிழ்ச்சியோடு வாழ்ந்தனர். அங்கு காற்று மாசுபாடு இருக்கவில்லை தண்ணீர் பற்றாக்குறை இல்லை. தங்கள் கிராமத்துக்கான எல்லா வசதிகளையும் தாங்களே செய்து, தாங்களே பராமரித்துக் கொண்டனர். என்ன ஒன்று அவர்களிடம் அளவுக்கு அதிகமாக பணம் இல்லை. மன அமைதி இருந்தது.

ஒரு கதை ஒன்று உண்டு. இப்படி அமைதியாக, சந்தோஷமாக மக்கள் வாழ்ந்து வந்த கிராமத்திற்கு வேற்று மனிதன் ஒருவன் வந்தான். அவனது தோற்றமே விகாரமாக இருந்தது. அவன் தான் இந்த கிராமத்துக்கு உதவி செய்வதாக வாக்களித்தான். அப்போது கூடை முடையும் ஒரு பெண் அப்படி ஒரு தேவை இங்கு இல்லையே என்றாள். ஆனால் அவனோ, உங்கள் தண்ணீரைக் கூட திருடுவதற்கு ஆட்கள் தயாராக இருக்கின்றனர் என்று கூறினான். விளைவு. கிராமத்தின் அமைப்பே மாறியது. காம்பவுண்டு சுவரில் கண்ணாடிகள் பதிக்கப்பட்டன.காவலாளிகள் நியமிக்கப்பட்டனர். எங்கு பார்த்தாலும் சதித்திட்டங்கள். பயம், நிம்மதி இழந்த மக்கள் சிரிக்க மறந்தனர். அந்த கிராமத்தை நோய் தொற்றியது. இதை உணர்ந்த அந்தக் கூடை முடையும் பெண் மூன்று சிறிய குழந்தைகளை ஒரு பெரிய ஆலமரப் பொந்தினுள் ஒளிய வைத்து, போகிற வருகின்ற மக்களைச் சிரிக்க வைத்தார். அதன் பின்பு அந்த மனிதனை அந்த கிராமத்தை விட்டு விரட்டி விட்டனர்.

இங்கு அந்த மனிதன்தான் இந்த அசுர வளர்ச்சி. அறிவியல் பூர்வமாக நாம் வளர்ந்து நிற்கின்றோம். எல்லா வகையான வசதிகளும் நம் உள்ளங்கையில். ஆனால் நம் உள்ளத்தில் இருந்த நிம்மதி எங்கே தொலைந்து போனது. நிலவுக்கும் செவ்வாய் கிரகத்திற்கும் செல்லும் நாம் இங்கு இருக்கும் வயல்வெளியை மறந்து விட்டோம். நம் தேவைகளை பூர்த்தி செய்யும் தொழிலை கைவிட்டு தேவையில்லாமல் இயற்கையை அழித்து அங்கு பாதைகள் அமைக்கிறோம். முக்காலமும் உணர்ந்த திருவள்ளுவரின் வாக்கு பொய்த்துப் போகாது. "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வர் மற்றெல்லாரும் தொழுதுண்டு பின் செல்வர்" இது நடக்கும் காலம் தொலை தூரத்தில் இல்லை. மக்கள் தங்கள் நிலைமையை உணர்ந்து கொள்ள வேண்டும். மனித பிறவியே கூட்டமாக வாழ பிறந்தவர்கள். அதற்கேற்றவாறு நம்முடைய உடலும், மனமும் வடிவமைக்கப்பட்டவை. அதனால் நாம் கூடி வாழ பழகிக்கொள்ளவேண்டும்.

# 9 வாழ்ந்து காட்டுவோம்

அனைவரும் தங்களது பணியின் நிமித்தமாக வெளியே சென்று விட்டனர்.வீடே அமைதியில் உறைந்து கிடந்தது.சிவராமனும், மகன் படித்து முடித்து வைத்திருந்த அன்றைய தின செய்தித்தாளை மெதுவாக பிரித்தார். முதல் பக்கத்திலேயே மனமுடைந்த விவசாயிகள் ரயில் மறியல் போராட்டம் என்பது தலைப்புச் செய்தியாக இருந்தது... அதனை படித்த பின்பு இரண்டாவது பக்கம் திருப்பினால் குடித்துவிட்டு தகராறில் ஈடுபட்ட கணவனை அடித்துக்கொன்ற மனைவி.அடுத்தபக்கம் தன்னை அடித்த ஆசிரியரை கல்லால் அடித்த மாணவன்,தேர்வில் தோல்வி அடைந்ததால் தற்கொலை செய்து கொண்ட மாணவி என்று பட்டியல் நீண்டு கொண்டே சென்றது.என்ன இது, எந்த பக்கம் திருப்பினாலும் இந்தச் செய்திதான் கண்ணில் படுகின்றது, என கனத்த இதயத்தோடு அதை மடித்து ஒரு ஓரமாக வைத்துவிட்டு தொலைக்காட்சி செய்தியை பார்க்கத் தொடங்கினார்.அங்கேயும் தூக்கில் தொங்கிய பெண்ணைப் பற்றிய செய்தி. தொலைகாட்சி பெட்டியை அணைத்துவிட்டு நாற்காலியில் சாய்ந்தவாறு கண்களை மெதுவாக மூடினார்.மெல்ல எண்ணக்குதிரை ஓடலாயிற்று.

அவர் சிறுவயதாக இருந்தகாலத்தில் எல்லாம் இவ்வாறான தற்கொலைகள் அதிகம் நிகழ்ந்ததில்லை.அங்கொன்றும், இங்கொன்றுமாக சில நிகழ்வுகள் நடப்பதுண்டு. தீராத வயிற்றுவலி காரணமாக கிணற்றில் குதிதத்துத் தற்கொலை , தாங்க முடியாத கடன் தொல்லையால் தூக்கிட்டு தற்கொலை போன்றவை நடப்பது உண்டு தான். ஆனால் இப்பொழுது அது மிகவும் அதிக அளவில் நடக்கின்றதே, அதற்கு என்ன காரணம் என்ற யோசனையில் ஆழ்ந்தார்.

சிவராமன் மூன்றாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தார்.அவரது பக்கத்து வீட்டில் வசித்து வந்த ரகுவரன் மிகவும் நெருங்கிய நண்பன். பள்ளியில் இருவரும் ஒன்றாக படித்தனர்.ரகுவரனுக்கு படிப்பில் மிகுந்த ஆர்வம் இருந்தது. அதனால் ஆசிரியர் சொல்லித் தரும் அனைத்து பாடங்களையும் கவனத்துடன் கேட்டு, வகுப்பில் முதல் மாணவனாக திகழ்ந்தான். ஐந்தாம் வகுப்பு முடித்த பின்பு மேலே படிக்க பக்கத்து ஊருக்குச் செல்ல வேண்டும். ஆனால் அவனது அப்பா அதற்கு சம்மதிக்கவே இல்லை அவனும்இரண்டு நாட்கள்அழுது பார்த்தான.பலனில்லை. அவனது அப்பா அவனை மாடு மேய்க்க அனுப்பி விட்டார்.

அவனுக்கு திருமண வயது வந்ததும் அவனது பெற்றோர்கள் அவனது மாமன் மகளான கல்யாணியை மணமுடித்து வைத்தனர். அவனுக்கும், கல்யாணிக்கும் ஏழாம் பொருத்தம் .சிறுவயதுமுதலே இருவருக்கும் ஒத்துவராது .எதெற்கெடுத்தாலும் சண்டைதான். இருந்தபோதிலும் அப்பா சொன்னதும் வேற வழியில்லாமல் ரகுவரன் சம்மதித்தான்.

திருமணமாகி தற்போது சுமார் நாற்பது வருடங்கள் முடிந்துவிட்டன. கல்யாணி ஒரு நாளும் கோபித்துக் கொண்டு அவளுடைய அம்மா வீட்டிற்குச் சென்றது கிடையாது. இருவரும் மூன்று குழந்தைகளைப் பெற்றெடுத்து, வளர்த்து, இன்றளவும் ஒற்றுமையாகத் தான் வாழ்ந்து வருகின்றனர்.,. எல்லாவற்றிற்கும் மனநிலைதான் காரணம்.

ரகுவரன் வாழ்வில் எத்தனை ஏமாற்றங்கள், தடங்கல்கள் வந்தாலும் தனது மனதைத் தளர விடவில்லை. அதற்காக தனது இலட்சியத்தையும் விட்டுகொடுக்கவில்லை. ஆம், இன்று அவன் ஒரு புகழ் பெற்ற எழுத்தாளர். தான் பெற்ற அனுபவக்கல்வி, அறிவு, எழுத்துத்திறன், கற்பனை வளம்,கொண்டு, தன் வாழ்வை வளமானதாக மாற்றிக் கொண்டான். பாலைவனமாக மாறி விட இருந்த தன் வாழ்க்கையை நம்பிக்கை என்னும் நீருற்று கொண்டு ஒரு சோலைவனமாக மாற்றிவிட்டான். உண்மையில் தன் நண்பனை நினைக்கையில் சிவராமனுக்கு பெருமையாக இருந்தது.

அப்படியே மெதுவாக எழுந்து பால்கனியில் உலாவத் தொடங்கினார். பக்கத்துவீட்டில் ஒரு அம்மா பிள்ளையிடம் சொல்லிக் கொண்டிருக்கிறாள்,"டேய், அங்கே போகாதே, அங்கே ஒரு பையன் நின்று கொண்டிருக்கிறான். அவன் உன் வடையை பிடுங்கித் தின்றுவிடுவான். யார் கேட்டாலும் கொடுக்கக் கூடாது, சரியா " என எச்சரிக்கிறாள். சட்டென்று சிவராமனுக்கு நினைவு வருகிறது. இப்படித்தான் அவன் ஒருநாள் பலகாரம் சாப்பிடும் போது பக்கத்து வீட் டில் இருந்த பையன் ஒருவன் வரவே அவனுடைய அம்மா அவனுக்கும் பாதிபிய்த்துக் கொடு என்று கூறினாள். இருவரும் ஆளுக்குப் பாதியாக பகிர்ந்து உண்டனர். ஒரு மெல்லிய புன்னகை அவரின் உதட்டோரம் மின்னியது.

இரவு நெடுநேத்திற்கு பின்னரே குணசீலன் வீடு திரும்பியதைக் கண்ட சிவராமன் , "என்னப்பா இன்றைக்கு இவ்வளவு நேரம். எப்பவும் ஏழு மணிக்கெல்லாம் வீட்டிற்கு வந்து விடுவாயே, "என வினவினார்."ஆமாம் அப்பா' என பதில் அளித்த குணசீலனின் குரலில் தொய்விருந்தது. "என்னப்பா? ஏதாவது பிரச்சனையா?" என்று அருகில் வந்து அமர்ந்து வாஞ்சையுடன் கேட்டார். குணசீலனும், "என்னுடைய நண்பன் குமரேசனை உங்களுக்குத் தெரியுமல்லவா? அவனுடைய ஒரேபையன் வெங்கடேஷ். பத்தாம் வகுப்பு தேர்வு எழுதி உள்ளான். நாளை ரிசல்ட் வர உள்ள நேரத்தில் தோல்வியுற்று விடுவோமோ என்ற பயத்தின் காரணமாக தற்கொலை செய்து கொண்டான். வீட்டில் உள்ள அனைவரும் நிலைகுலைந்து

போய் விட்டனர் "என்றார் .கண்களில் நீர் தளும்ப. இதைக் கேட்ட சிவராமனுக்கு குழப்பம் அதிகரித்தது. இன்னமும் தான் தேர்வு முடிவுகள் வெளிவரவில்லையே, அவன் தேர்ச்சி பெற கூட வாய்ப்பு இருக்கிறது. அதுவும் போக இது ஒன்று தான் வாழ்க்கையில் முன்னுக்கு வர வழியா? ஏன் இதைக் கூட புரிந்துகொள்ள முடியவில்லை? ஏற்றுக்கொள்ள முடியவில்லை? இவ்வளவு சிறுவயதில் கோழைத்தனமான முடிவுக்கு வந்து விட்டானே உண்மையிலே அந்தப் பெற்றோர்கள் பாவம்" என மனம் நொந்தார்.

இதனைஅருகில் இருந்து கேட்டுக் கொண்டு இருந்த பானுமதி,'ஆமாம் மாமா. இன்றைய சமூகத்தில் இவ்வாறான நிகழ்வுகள் நிறைய நடக்கின்றன. என்னுடைய தோழியின் உறவினர் ஒருவர் தகவல்தொழில் நுட்பத் துறையில் வேலை பார்த்து வருகிறார். அவர் வேலை நெருக்கடி அதிகமானதால் மன அழுத்தத்தின் காரணமாக தூக்க மாத்திரைகள் அதிகம் சாப்பிட்டு விட்டார். நல்லவேளையாக வீட்டில் உள்ளவர்கள் உடனடியாக கவனித்த காரணத்தினால் உயிர் தப்பிவிட்டார். இன்று அவர் மனநல மருத்துவரிடம் சிகிச்சை பெற்று வருகிறார். இதைக் கேட்ட சிவராமனும், "ம்ம்ம்.....எத்தகைய பிரச்சனைக்கும் ஒரு தீர்வு உண்டு. பயம் தான் அந்தப் பாதையை மறைக்கின்றது. ஒரு பிரச்சனை வரும் போது நாம் திகைத்து நின்றால், பயத்தில் உறைந்து போனால், நம் வாழ்வு முடிந்துவிட்டது என்ற உச்ச கட்ட நிலைமைக்குச் சென்றால், நம் எதிரில் உள்ள பாதை மறைக்கப்பட்டு விடும். இந்த திரைகளை விலக்கி தெளிவாகப் பார்த்தால் பாதை புலப்படும். இங்கு நமக்குத் தேவைப்படுவது மனயதைரியமும்,தெளிவான மனநிலையும் தான். நாம் அதை வளர்த்துக் கொள்ள வேண்டும்," என்று கூறினார். அனைவரும் உறங்கச் சென்றனர்.

இரவு நெடுநேரம் ஆகியும் தூக்கம் வராமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தார் சிவராமன். இந்தச் சமுதாயத்தின் மாற்றத்திற்குக் காரணம் என்ன? என ஆழமாகச் சிந்தித்தார். அந்தக் காலத்தில் மக்கள் தன்னலம் மட்டுமே கருதாமல், பிறருக்கும் உதவி செய்து வாழ்ந்தனர். அதனால் மனநிறைவு கிடைத்தது. ஆனால் இப்போது யெரும்பாலான மக்கள், எதுவானாலும் தனக்கு மட்டுமே கிடைக்க வேண்டும் என விரும்புகின்றனர். அதனால் தான் வாய்க்கால் வரப்புச் சண்டைகள் அதிகரித்துள்ளன. சொத்துக்காக மகனே தந்தையைக் கொல்லும் அவல நிலை ஏற்பட்டுள்ளது. இதனால் ஏமாற்றமும் விரக்தியும் மிஞ்சுகின்றன. விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையை வளர்த்தால் மட்டுமே இதற்கு ஒரு தீர்வு கிடைக்கும். அந்தக் காலத்தில் ஒரு குடும்பத்தில் நிறைய குழந்தைகள் இருப்பார்கள். அதனால் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து வாழ்ந்தனர். அதனால் கூட்டுக் குடும்பமாக வாழ்ந்தாலும் ஒருவரை ஒருவர் அனுசரித்து போனதால், வாழ்க்கை இனிமையானதாக இருந்தது.

கூட்டுக் குடும்பமாக வாழும் போது, குழந்தைகளுக்குத் தாத்தா பாட்டி நீதிக் கதைகள் சொல்லி வளர்ப்பார்கள். இதைக் கேட்டு வளரும் குழந்தைகளின் மனதில் அவைகள் வேரூன்றி விடும். அவர்கள் நேர்மையாகவும், நீதிக்கு அடிபணிந்தவர்களாகவும் வாழ்ந்தனர். அந்த காலத்து குழந்தைகளின் வாழ்வில் "சத்திய சோதனை" ஒரு பாடமாக அமைந்தது. ஆனால் இந்த காலத்தில் பெரும்பாலும் குழந்தைகள் தனிமையில் வாழ்கின்றனர். அதிலும் குறிப்பாக பெற்றோர் இருவரும் வேலைக்குச் செல்லும் பட்சத்தில் சொல்லவே வேண்டாம். அவர்கள் முகத்தைப் பார்க்கவோ,பேசவோ, தன் உணர்வுகளைப் பகிர்ந்து கொள்ளவும் குழந்தைகளால் முடிவதில்லை. இப்படி வளரும் குழந்தைகள், தானே எல்லாவற்றையும் அனுபவிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் வளர்கின்றனர்.

இப்போது பிறக்கும் குழந்தைகள் இயற்கையிலேயே மிகுந்த திறமை வாய்ந்தவர்களாக இருக்கின்றனர். அது மிகவும் பெருமை படக் கூடிய விஷயம் தான். ஆனால் எல்லா திறமைகளையும் தானே அடக்கி ஆள வேண்டும் என நினைக்கும் போதுதான் அது ஆபத்தில் முடிகின்றது. அதுவும் போக, ஒரு சிறிய வேலையைக் கூட மனமகிழ்வுடன் செய்ய கற்றுக் கொள்ள வேண்டும். அப்போதுதான் மனதில் ஒரு திருப்தியும், மகிழ்வும் நிறையும். நேர்மையான எண்ணங்கள் வளரும். இதுவே ஒரு வளமான சமுதாயத்திற்கு வித்திடும் என மனதில் எண்ணியவாறு நிம்மதியுடன் உறங்கினார்.

மனிதர்களாகிய நாம் இயற்கையை உற்று நோக்க வேண்டும். மாலைப்பொழுதில் பறவைகள் கூட்டமாகப் பறந்து செல்லும் காட்சி மனதை ஈர்க்கின்றது. காடுகளில் விலங்குகள் கூட கூட்டம் கூட்டமாகத்தான் வாழ்கின்றன. சற்றே சிந்தியுங்கள்.தேன்கூட்டில் மொய்க்கும் தேனீக்கள் தனித்து வாழ ஆரம்பித்தால் என்ன நடக்கும்? மனிதனும் கூட்டமாக வாழ படைக்கப்பட்டவன் தான். தனிமை என்ற போர்வையை விலக்கினால், நம் துன்பங்கள் நீங்கும் .இயற்கை நமக்கு உணர்த்தும் பாடத்தை கருத்தில் கொண்டால் நம் வாழ்வில் வெற்றி நிச்சயம்.

முற்றும்

# 10 *கணியம் அறக்கட்டளை*

**தொலை நோக்கு** – Vision

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழலை உருவாக்குதல்.

**பணி இலக்கு** – Mission

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

**எமது பணிகள்**

•கணியம் மின்னிதழ் - kaniyam.com

•கணிப்பொறி சார்ந்த கட்டுரைகள், காணொளிகள், மின்னூல்களை இங்கு வெளியிடுகிறோம்.

•கட்டற்ற தமிழ் நூல்கள் - FreeTamilEbooks.com

•இங்கு யாவரும் எங்கும் பகிரும் வகையில், கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமையில், தமிழ் மின்னூல்களை இலவசமாக, அனைத்துக் கருவிகளிலும் படிக்கும் வகையில் epub, mobi, A4 PDF, 6 inch PDF வடிவங்களில் வெளியிடுகிறோம்.

•தமிழுக்கான கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்கம்

•தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்

•விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்

•OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்.

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**வெளிப்படைத்தன்மை**

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், முழுமையான வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும். https://github.com/KaniyamFoundation/Organization/issues இந்த இணைப்பில் செயல்களையும், https://github.com/KaniyamFoundation/Organization/wiki இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

**நன்கொடை**

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**

**Account Number : 606 1010 100 502 79**

**Union Bank Of India**

**West Tambaram, Chennai**

**IFSC – UBIN0560618**

**Account Type : Current Account**